# நிலவினிலே

அகிலன்





பழனி பிரசுரம்
மணிக்கூண்டு :: புதுக்கோட்டை

# முன்னுரை

இந்தச் சிறுகதைகள் தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரின் பாராட்டுதலைப் பெற்றதோடு நின்றுவிடவில்லை. அதைவிட முக்கியமாக தமிழ்மக்களின் பாராட்டுதலைப் பெற்றிருக்கிறது. இல்லாவிட்டால் முன்பே ஒருமுறை பத்திரிகைகளில் வந்த இந்தச் சிறுகதைகள் இப்போது **மூன்றும்பதிப்பாக** வெளிவர முடியுமா?

இந்தப் பதிப்பை மிகவும் குறைந்த விலையில் வெளியிடுகிறார்கள் பழனி பிரசுரத்தார். இவர்கள் மேல்பூச்சுக்கு இலக்கிய சேவை செய்பவர்கள் அல்ல. ரூபா, அணு, பைசாவைத் தவிர தனியான ஓர் இன்பத்தையும் இதனால் பெறுபவர்கள். கதாசிரியனுக்கு எப்படியோ அப்படியே இவர்களுக்கும் அதிகமான சிந்தனையுள்ள வாசக உலகம் தேவையாக இருக்கிறது. இதற்காக நான் பிரசுரத்தாரை மிகவும் பாராட்டுகிறேன்.

முதல் இரு பதிப்புகளைவிட இதில் எழுத்துச் சற்றுச் சிறிதாகத் தோன்றலாம். குறைந்த விலையில் இதைப்பெறும் வாசகர்கள் இந்தச் சிறிய சிரமத்தைப் பொருட்படுத்தமாட்டார்கள் என்று நம்புகிறேன். இந்தப் பதிப்பை அழகுற அமைப்பதில் செந்தமிழ்ப் பதிப்பகத்தார் அதிகமாக ஒத்துழைத்துள்ளார்கள். அவர்களுக்கும் நன்றி.

திருச்சி
4—12—53

**அகிலன்**

அவள் மெதுவாகச் சிரித்தாள்; பல் வரிசை முத்துச் சுடரொளி காட்டி மறைந்தது.

வாசு தன்னை மறந்தான். இன்ப மயக்கத்தில் "நீ எப்போதும் என் அருகில் பாடிக் கொண்டே இருக்கிறாயா? நான் கேட்டுக் கொண்டே இருக்கிறேன்" என்றான்.

# நிலவினிலே

"நான் சொல்வதைப் புரிந்து கொண்டாயா சுமதி?" என்றான் வாசு.

சுமதியின் அகன்ற விழிகள் ஆச்சரியத்தால் மலர்ந்தன. ஆனால் அவளது ஆச்சரியத்தில் அர்த்தமற்ற ஒரு வியப்பைத் தவிர வேறு எவ்வித உணர்ச்சியையும் காணோம். ஏதோ புதிய முகத்தைச் சின்னஞ் சிறு விளையாட்டுப் பிள்ளை பார்ப்பதுபோல் பார்த்தாள்.

வாசுவின் குரல் தாழ்ந்தது. "என்ன சுமதி! என்ன பார்க்கிறாய்?"

அவள் மெதுவாகச்சிரித்தாள்; அதுவும் அர்த்தமற்ற சிரிப்புத் தான்!

சௌந்தர்ய உலகத்தின் உச்சிக்குத் தாவிக்கொண்டிருந்த வாசுவின் கற்பனை, பெட்டிப் பாம்புபோல் உள்ளுக்குள்ளேயே அடங்கிவிட்டது.

கடைசியில் சுமதி பேசினாள்: "என்ன சொல்லுகிறீர்கள்? நான் உங்களுடன் ஊருக்கு வந்துவிடவேண்டுமா? அங்குதான் இம்பாதிரி ஏரிகளும், மலைகளும், காடுகளும் இருக்காதென்கிறீர்களே! அப்படியிருக்கும்போது..."

"ஆனால் நான் அங்கு இருப்பேனல்லவா?"

அவள் அதைப் புரிந்துகொள்ளவில்லை; முன்போலவே மிரள மிரள விழித்தாள்.

இதற்குள் அந்த அன்னப் படகு ஏரியின் மறுகரைக்குப் போய், திரும்பவும் பாதி வழிக்குமேல் வந்துவிட்டது. வாசு, மேலே வான வெளியிலிருந்து அமுதம் பொழியும் பூரண சந்திரிகையை நோக்கினான். சற்று நேரத்திற்கு முன், அருகிலிருக்கும் சுமதியின் சுந்தரவதனம் போன்றிருந்த அந்த நிலவு இப்போது வெளுத்துப்போன கண்ணாடித் தகடாக மாறிவிட்டதைக் கண்டான். இந்த உல்லாசப் பிரயாணத்திற்கு முடிவே இருக்கக் கூடாதென்று சில நிமிடங்கள் முன் வேண்டியவன், எப்போது ஏரிக் கரைவரும் என ஏங்கினான்.

படகு என்னவோ மெதுவாகத்தான் மிதந்தது. அதில்துடுப்புப் போட்டுக்கொண்டிருந்த கிழவர், சுமதியின் பாட்டனார், லேசாக, சுமதி கொஞ்ச நாழிகைக்கு முன்பு பாடிய பாட்டுக்களுக்கு விமரிசனம் செய்ய ஆரம்பித்தார். அவரது வேடிக்கையான பேச்சைக் கேட்டு, துடுப்புகளினால் தள்ளப்பட்ட ஏரிநீர் மாத்திரம் சலசலப்புடன் சிரித்தது. வாசு அவர் பேச்சைக் காதில் போட்டுக்கொள்ளவே இல்லை. அவனது கவனம் ஏரியின் எதிர்க்கரைத் தென்னந் தோப்பின் கருநிழலை ஊடுருவிக்கொண்டு, அதற்கும் அப்பால் எங்கோ சென்றது.

கிழவரின் விமரிசனம் முடிவதற்கும், ஏரிக்கரை வருவதற்கும் சரியாக இருந்தது. படகை இழுத்துப் பக்கத்தில் நின்ற

தென்னையின் அடிமரத்தில் கட்டிவிட்டு எல்லோரும் வீட்டிற்குத் திரும்பினர்.

மறுநாட் காலை எல்லோரும் ஆச்சரியப் படும்படியாகத் திடீரென்று ஊருக்குக் கிளம்பினான் வாசு. கிழவர் எவ்வளவோ கூறினார்; கேட்கவில்லை. சென்னைக்கு ஒரு நண்பனை வரச் சொல்லியிருப்பதாகவும், அவனைப் போய்ச் சந்திக்க வேண்டு மென்றும் காரணம் கூறினான்.

சுமதியிடம் சொல்லிக்கொண்டபோது அவள் "அதற்குள்ளா கவா புறப்பட வேண்டும்? இன்னும் இரண்டு நாள் தங்கிப்போக லாமே! நேற்றுவரையில்கூட என்னிடம் நீங்கள் ஊர் திரும்பு வதைப் பற்றிச் சொல்லவில்லையே" என்றாள்.

"இல்லை, நான் போகவேண்டும்" என்றான் கடுமையான குரலில்.

அப்போது அவன் பார்த்த பார்வையும், அவன் குரலின் கடுமையும், கலக்கமும் சுமதியை என்னவோ செய்தன. வாசு வின் கண்களினூடே தன் விழிகளைச் செலுத்தி அவள் அவ னுடைய இதய அந்தரங்கத்தைத் தேடினாள். ஆனால், அதற்காக அவன் காத்திருக்கவில்லை; 'விர்' என்று அதே கணம் வெளியே கிளம்பிவிட்டான்.

கிழவர் கேசவமேனன் ஒரு தார் நேந்திர வாழைப் பழத் துடன் அவனை ரெயிலில் அனுப்புவதற்காக அருகிலிருந்த ஸ்டே ஷனுக்குக் கிளம்பினார்.

வாசு சென்ற வழியே எதையோ பறிகொடுத்தவள்போல் விழி வைத்து நின்றாள் சுமதி. ஒரு முறையேனும் அவன் திரும் பிப் பார்க்கமாட்டானா, ஓடிப்போய்த் திரும்பவும் அவனை அழைத்து வரமாட்டோமா என ஏங்கியது அவள் மனம். ஆனால்

அவன் கணப்பொழுதாவது இந்த வீட்டின் பக்கம் திரும்பவேண்டுமே! என்ன பிடிவாதம் அவனுக்கு!

ஃ ஃ ஃ

வாசு அப்போது சென்னையில் படித்துக்கொண்டிருந்தான். அவனுக்குப் பெற்றோர்கள் கிடையாது. கிராமத்தில் அவனுக்குச் சொந்தமான நிலபுலன்களை அவன் மாமா கவனித்து வந்தார். விடுமுறைகளிலெல்லாம் அநேகமாக அவனுக்கு மாமா வீடுதான். மாமாவிற்கும் வேறு பிள்ளை கிடையாது.

படித்த நேரம் போக மற்ற சமயங்களில் வாசு பொழுது போக்கிற்காக ஆங்கிலத்திலும், தமிழிலும் கதைகள் கட்டுரை எழுதுவான். பத்திரிகைகள், புத்தகங்கள், சங்கங்களில் அவனுக்கு அதிகப் பிரியம். அதைப்போலவேதான் கடற்கரை, வயல் வெளி, தோப்புத் துரவு முதலியவையும்.

வாசுவிற்கு இரண்டு வருடங்களாகவே கேரள நாட்டுப் பக்கம் போய்ச் சுற்றிவர வேண்டுமென ஆவல். இதற்கு முக்கிய காரணம் அவனுடைய பழைய மலையாளி நண்பன் முகுந்தன் தான். முகுந்தன் எப்போதுமே தங்களுடைய பிரதேசத்தின் வளப்பத்தைப் பற்றிச் சொல்லிப் பெருமைப் பட்டுக்கொள்வது வழக்கம்.

முகுந்தன் படிப்பை முடித்துக்கொண்டு தன் ஊர் போய் இரண்டு வருடங்கள் சென்றுவிட்டன. போன புதிதில் சில கடிதங்கள் போட்டான். அப்புறம் ஏனோ கடிதம் வருவது திடீரென நின்றுவிட்டது.

இந்த விடுமுறை வந்தவுடன் வாசு முகுந்தனுக்கு எழுதினான். தான் அவ்விடம் மறுநாளே புறப்பட்டு வருவதாகவும், தன்னுடன் அவன் நாலைந்து நாட்கள் அந்தப் பக்கம் சுற்றிவரத் தயாராக

இருக்க வேண்டுமென்றுங் குறிப்பிட்டிருந்தான். அதன்படியே புறப்பட்டான்.

வாசு ரெயில்வே ஸ்டேஷனில் வந்திறங்கியபோது அவனுக்காக அங்கே முகுந்தன் காத்திருக்கவில்லை. யாரோ கிழவர் மாத்திரம் இவனை ஆச்சரியத்தோடு பார்த்தார். சற்று நேரத்திற்கெல்லாம் அவராகவே முன்வந்து "தாங்கள் தானோ வாசு என்பது? முகுந்தனைத் தேடிக்கொண்டு வந்தவர்கள்?" என்றார்.

"ஆமாம்."

மௌனமாக அவர் அவனைப் பக்கத்திலிருந்த வீட்டிற்கழைத்துப்போனார். போகும் வழியில் வாசுவின் கேள்விக்குப் பதிலாக, முகுந்தன் ஒரு வருஷத்திற்கு முன்பு திடீரென இறந்துபோன செய்தியைத் தெரிவித்தார். வாசுவிற்குத் தூக்கிவாரிப்போட்டது. வீட்டில் அவருடன் அரைமணி நேரம் தங்கி, அவருக்குச் சமாதானம் கூறிவிட்டு, ஊருக்குத் திரும்ப எழுந்தான்.

"நடந்தது நடந்துவிட்டது; நீங்கள் இங்கு சில தினங்களாவது தங்கிப் போகவேண்டும். உங்கள் முகத்தைப் பார்த்தாவது நாலு நாளைக்கு அவனை மறக்கலாம்" என்றார் கிழவர்.

இந்த வேண்டுகோளை அவன் எங்ஙனம் மறுப்பது?

ஒரு சிறிய ஓட்டு வீடு; அதில் காற்றோட்டமுள்ள பல அறைகள்; அதைச் சுற்றிலும் பெரிய தோட்டம். தோட்டத்தில் பலா, வாழை, தென்னை, பாக்கு முதலிய மரங்கள். அந்த வீட்டில் அப்போது அந்த கிழவர் கேசவமேனனுடன் ஒரு சமையற்காரியும் இருந்தாள்.

வாசு தனக்கு விடப்பட்ட அறையிலிருந்து ஜன்னல் வழியாக அருகிலிருந்த பிரமாண்டமான மலையையும், அதிலிருந்து தாவி வரும் அருவியையும் வேடிக்கை பார்த்தவண்ணமிருந்தான்.

வெளியே சிறு தூற்றல் போட்டுக்கொண்டிருந்தது; அதனால் அவன் சுற்றிவர வெளிக் கிளம்பவில்லை. இச்சமயத்தில் வீட்டின் உட்புறத்தில் இளம்பேச்சுக் குரலொன்று கணீரென்று ஒலித்தது. உற்றுக் கவனித்தான்.

"ஏன் அப்பு! பாண்டிநாட்டு விருந்தாளி வருவதாக எழுதியிருந்தாரே, வந்துவிட்டாரா?" என்று மலேயாளத்தில் அந்தச் சமையற்காரியைப் பார்த்துக் கேட்டுக் கொண்டிருந்தாள் ஒரு பெண்.

வாசு கதவின் வழியே பார்த்தான். ஒரு கைநிறையப் புத்தகங்கள்; மற்றொரு கரத்தில் ஒரு பெரிய வாழை இலை. அவள் அதை முற்றத்தில் நின்றபடியே மழைக்குக் குடையாக உபயோகித்துக் கொண்டிருந்தாள்.

வயது பதினைந்கு இருக்கும். அடர்ந்த சுருண்ட கேசம்; அதைப் பாதிவரையில் பின்னலிட்டுத் தொங்க விட்டிருந்தாள். அந்தச் சடையின் மத்தியில் நீல நிற ரிப்பன் ஒன்று பட்டுப்பூச்சி போல் தொத்திக்கொண்டிருந்தது. இடுப்பில் கருப்புக்கரை ஓடிய வெள்ளைப் பாவாடை; மேலே ரோஜா நிற ஸில்க் ஜாக்கெட் தாவணி இல்லை.

அவள் வாசுவின் அறைப்பக்கம் திரும்பினாள்; அவனைக் கண்டவுடன் அவளது முகம் இன்னும் சிவந்தது. வாசு அப்படியே பிரமித்துவிட்டான். தந்தத்தால் கடைந்தெடுத்த உருவம்; களை சொட்டும் முகம்; அதில் கவர்ச்சியுடன் கலந்து நோக்கும் கண்கள்!

"இவர் தானம்மா உன் அண்ணனின் நண்பர்" என்றாள் சமையற்காரி அப்பு.

வாசு லேசாகச் சிரித்துவிட்டு, "முகுந்தனின் தங்கையா அம்மா நீ? உன் பெயரென்ன? நீ என்ன படிக்கிறாய்?" என்றான்.

"நான் பக்கத்தூர்ப் பள்ளிக்கூடத்தில் பத்தாவது படிக்கிறேன்; என் பெயர் சுமதி" என்றாள் தமிழில். அநேகமாக அங்கே எல்லோருக்குமே தமிழ் சுமாராக தெரிந்திருக்கும்.

மழை நின்ற பின்பு வாசு, சுமதி, கிழவர் மூன்று பேரும் உலவி வருவதற்காக வெளியே புறப்பட்டனர். காடுகளையும், மலைகளையும், மலையருவிகளையும் வாசு புதிய கண் கொண்டு பார்த்தான். அழகுத் தெய்வம் சுமதி அவன் அருகிலிருக்கும் போது அவைகள் அவன் உள்ளத்தில் ஆயிரம் ஆயிரம் இன்பக் கற்பனைகளைக் கிளறிவிட்டன. வாழ்க்கையிலேயே வேறொருவரும் அடைந்திருக்காத அடைய முடியாத இன்பத்தைத் தான் அந்தக் கணத்தில் அடைந்திருப்பதாக அவன் உணர்ந்தான்.

ஐந்து நாட்கள் சென்றன. அந்த நாட்களில் சுமதி பள்ளிக்கூடம் சென்றிருக்கும் போதெல்லாம் அவளைப் பற்றியே நினைத்து இன்பக் கனவு காணுவான். அவள் பள்ளிவிட்டு வந்துவிட்டாலோ, அப்புறம் பொழுது போவதே தெரியாது.

ஐந்தாவது நாள் பௌர்ணிமை இரவு. அன்று பக்கத்து ஏரியில் தோணியில் உலவிவர சுமதியின் பாட்டனார் ஏற்பாடு செய்திருந்தார்.

பால் நிலவு பொழியும் வேளையில் அன்னப் படகில் மூவரும் ஏறி அமர்ந்தனர். கிழவரின் துடுப்பு அசையப் படகும் நகர்ந்தது. வாசுவின் குதூகலத்திற்கு எல்லையில்லை. வாழ்க்கையில் இந்தச் சில நிமிடங்களுக்காக அவன் எண்ணற்ற முறை இந்த உலகத்தில் பிறக்கத் தயாராக இருந்தான். மெதுவாக அவன் வாய் இந்தப் பாட்டை முணுமுணுத்தது.

சிந்து நதியின் மிசை நிலவினிலே
சேர நன்னாட்டிளம் பெண்களுடனே
சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்துத்
தோணிகளோட்டி விளையாடி வருவோம்!

வாசுவின் முணுமுணுப்பு முடிந்தது. உடனே, "சுமதி! உனக்குப் பாடத் தெரியுமா?" என்றான்.

சுமதி தயங்கவில்லை; வெட்கப்படவில்லை; உடனே தமிழில் ஒரு பாட்டுப் பாடினாள். பாட்டு பிரம்மானந்தமாயிருந்தது.

"சுமதி, உன் பாட்டு உண்மையிலேயே தேவகானந்தான்!"

அவள் மெதுவாகச் சிரித்தாள்; பல்வரிசை முத்துச்சுடரொளி காட்டி மறைந்தது.

வாசு தன்னை மறந்தான் இன்ப மயக்கத்தில்.

"நீ எப்போதும் என் அருகில் பாடிக்கொண்டே இருக்கிறாயா? நான் கேட்டுக்கொண்டே இருக்கிறேன்." என்றான்.

கிழவரின் காதில் இதொன்றும் விழவில்லை. அவர் படகின் மற்றொரு கோடியில் இருந்தார். வாசு மேலும் பேசினான். இளமையின் பைத்தியக்காரத்தனம் அவனை இன்னும் என்னவெல்லாமோ பேச வைத்தது. கடைசியாக "நீ என்னுடன் ஊருக்கு வந்து விடுகிறாயா, சுமதி? அருகிலிருந்து பாடிக்கொண்டே இருக்கலாம்!" என்றான்.

அதற்கு அவள் பார்த்த பார்வை. "இப்படியும் ஒரு பைத்தியக்காரப் பிள்ளை உலகத்தில் இருக்குமா?" என்று அவனைக் கேட்பதுபோல் அவனுக்குத் தோன்றியது. அதற்காகத்தான் அவள் மேல் அவ்வளவு கோபம் அவனுக்கு. அதற்காகத்தான் அவன் அவ்வளவு பதட்டமாக ஊருக்குக் கிளம்பினான்!

வாசுவை வண்டியில் அனுப்பிய கேசவ மேனன், "போய்க் கடிதம் எழுதுங்கள் வாசு!" என்றார். "ஆகட்டும்" என்று எங்கோ நினைத்தவாறு அவரைக் கையெடுத்துக் கும்பிட்டான். வண்டியும் நகர்ந்தது. வண்டியிலிருந்தவாறே அரை குறையாய்த் தெரிந்த சுமதியின் வீட்டைப் பார்த்தபோது, அவள் அங்கேயே நின்ற

வண்ணம் ரெயிலைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் மார்பகம் விம்மி, ஒரு பெருமூச்சை வெளியே தள்ளியதை வாசு கவனிக்கவில்லை.

ரெயிலின் வேகம் அதிகரித்தது. இப்போதுதான் வாசுவுக்குத் தன்னைப்பற்றி நினைக்க அவகாசம் கிடைத்தது. ஜன்னலின் வெளியே எதிர்த்தோடும் செடி கொடிகள் போல் நினைவுகள் பின் சென்றன. "அவளைச் சொல்ல என்ன குற்றம்? நான்தான் நிதானமிழந்து விட்டேன்; பொறுமையற்றுவிட்டேன்; யோசனையில்லாமல் நடந்து கொண்டேன்;........ஆனால்...ஆனால்...இந்தச் சம்பவத்தை என்னால் மறக்கவே முடியாது; இதன் நினைவு என்றுமே என்னுள்ளத்தில் பசுமையளித்துக் கொண்டிருக்கும்......சுமதி!—அழகான பெயர்; அழகான பெண்; அழகான குரல்;...ஆனால் பாவம், என்னைத்தான் அவள் புரிந்து கொள்ளவில்லை!"

இதே நினைவுகளுடன் வாசு ஊர் வந்து சேர்ந்தான்.

வருடங்கள் சென்றன. வாசுதேவனுக்குப் படிப்பு முடிந்தது. ஆனால் அவன் ஒரு வேலைக்கும் போகவில்லை. கிராமத்தில் இருந்து கொண்டு பத்திரிகைகளுக்குக் கதை கட்டுரைகளும், புத்தகங்களும் எழுதி வந்தான். மத்தியில் சில மாதங்கள் தேசத்திற்காகச் சிறையில் கழித்தான்.

அவனுடைய ஆங்கிலச் சிறுகதைகள் பெரும்பாலும் பம்பாயில் நடந்துவரும் ஒரு மாதப் பத்திரிகையில் அடிக்கடி வெளிவரும். அதன் ஆசிரியர் வாசுவுக்கு நெருங்கிய நண்பராகிவிட்டார். இம்முறை அவரிடமிருந்து, தமது வருஷ மலருக்கு வாசுவின் சிறந்த சிறு கதை ஒன்று வேண்டுமென்று கடிதம் வந்திருந்தது.

வாசு வெகு நாளாகத் தன் மனத்தை உறுத்திக் கொண்டிருந்த அந்தப் பழைய சம்பவத்தை எழுதி அனுப்பினான். அந்தக் கதைக்குப் பெயர் '**என்றோ ஒரு நாள்!**'

மலர் வெளி வந்தது. வாசு மலரைத் திறந்து பார்த்தான். அவனுடைய கதைக்கு ஒரு மூவர்ணப் படம். அன்று இரவு அவன் சுமதியுடன் படகில் ஊர்ந்த அதே இன்பக் காட்சி! அந்தப் படகில் உட்கார்ந்திருக்கும் ஆடவன் வாசுவேதான்!—அவன் புகைப்படத்தைக் கேட்டிருந்த அந்தப் பொல்லாத ஆசிரியர் தமது சித்திரக்காரரைக் கொண்டு இவ்விதமா செய்துவிட்டார்?

ஒரு வாரம் சென்றது. எதிர்பாராதபடி பத்திரிகை விலாசத்திற்குப் பம்பாய் போய் ஒரு கடிதம் திரும்பி வந்தது. அதில் அவனுடைய சிறு கதையைப் பற்றி முக்கியமாகக் குறிப்பிட்டுவிட்டு, அவனது விலாசத்தைத் தெரிந்துகொள்ள விரும்புவதாகவும் எழுதியிருந்தது. கீழே கையெழுத்தைப் பார்த்தான். கேசவமேனன்! ஆனால் கடிதம் எழுதப்பட்டிருந்ததோ வேறொருவருடைய கரத்தால்!

அப்படியும் இருக்குமா என எண்ணிக்கொண்டு விலாசத்தைப் பார்த்தான். விலாசம் சென்னை ராயபுரத்தில் ஏதோ ஒரு நம்பர் வீடு.

"இந்த கேசவமேனன் யாரோ? சுமதியின் பாட்டனாராக இருந்தால்"—அவருக்குச் சென்னையில் என்ன வேலை?......ஒரு முடிவுக்கும் வராமல் ஒரு பதில் எழுதிப் போட்டான். அதில் கேசவமேனனுக்கும், முகுந்தன் என்ற தன் பழைய நண்பனுக்கும் ஏதும் உறவு உண்டா எனவும் கேட்டிருந்தான்.

மூன்று தினங்களாகியும் கடிதத்திற்குப் பதில் இல்லை. அறையில் உட்கார்ந்த வண்ணம் வாசு அன்றையத் தபாலை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். மனம் யோசனையில் ஆழ்ந்திருந்தது.

இதே சமயத்தில் வாசலில் வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. அவசரமாக வெளியே வந்து பார்த்தான். வண்டியிலிருந்து இறங்கி மெதுவாகச் சிரித்துக் கொண்டே உள்ளே நுழைந்தாள் சுமதி.—பழைய சுமதியா இவள்! இல்லை; வசந்தத்

தில் மலர்ந்த முதல் ரோஜா; பருவத்தின் பரிபூரணக் கருணையைப் பெற்ற எழிலரசி!

சுமதியை அழைத்து உட்கார வைத்துவிட்டுத் தானும் எதிரே இருந்த நாற்காலியில் அமர்ந்தான். மௌனப் பார்வையில் இருவரும் வெகு நேரம் பேசிக் கொண்டனர். கடைசியாக வாசு, "இந்தக் கடிதம் நீ எழுதியதுதானே?" என்று ஆரம்பித்தான்.

"ஆமாம்."

"சென்னையில் என்ன வேலை? எப்போ வந்தீர்கள்?"

"டாக்டருக்குப் படிக்கவந்தேன்; வந்து ஒரு வருடத்திற்கு மேலாகிறது."

"அங்கிருந்த வீடு வாசல்?"

"எல்லாவற்றையும் விற்றுத்தான்!"

"அந்த அழகான பிரதேசத்தை எப்படித்தான் பிரிய மனம் வந்ததோ?"

"சிறைப்புக்காகத்தான்!" எனப் பெருமூச்சு விட்டாள் சுமதி.

பின்பு அவளே தொடர்ந்து "இங்கு யாவரும் சுகமா? உங்களுக்கு வந்து...வீட்டில்......குடும்பம்......" என்றுள் இழுத்த படியே.

"நான் இன்னும் குடும்பஸ்தனாகவில்லை; மாமாவும், மாமியும் வெளியூர் போயிருக்கிறார்கள்" என்று வாய்விட்டுச் சிரித்தபடியே பதிலளித்தான்.

சற்று நேரம் யோசித்துவிட்டுச் சுமதி திடீரென அவனை ஒரு கேள்வி கேட்டாள். "தங்கள் சிறு கதையில் வரும் அந்தப் 'புரியாதபெண்' யாரோ?"

"அவள் முன்பு சிறுமியாக இருந்த அந்தச்சுமதி!"

சுமதி சற்றே மௌனம் சாதித்தாள். பின்பு "அந்தச் சிறுமி மறு நாளே மற்றவரின் உள்ளத்தைப் புரிந்து கொண்டாள்; ஆனால் புரிந்துகொண்டு என் செய்வது? அவர்தான் ஒரேயடியாய்ப் போய்விட்டாரே!"

"புரிந்து கொண்டாளா! காலத்தின் போக்கில் அவள் மனம் மாறவில்லையா?"

"அவள் அப்படியேதான் இருக்கிறாள்; ஆனால் அவர் எப்படியோ?"

"சுமதி!" என ஆர்வத்தோடு அழைத்தான் வாசு. "நீ டாக்டருக்குப் படிக்க வேண்டியதில்லை; என் பிழைப்பு ஒன்றே நம் குடும்பத்திற்குப் போதும்; இதை நான் எங்கு வேண்டுமென்றாலும் இருந்து நடத்தலாம்—வா! நீ பிறந்து வளர்ந்த அந்த சௌந்தர்யப் பிரதேசத்திற்கே நாமிருவரும் போய்விடுவோம்."

ஃ ஃ ஃ

அதோ, அந்த ஏரியின் மத்தியில், அன்னப் படகிலிருந்து, இன்பமயமான குரலிசை ஆகாயத்துச் சந்திரனைக் கூவி அழைக்கின்றதே, அது வேறு யாருடையதுமல்ல; வாசுவும், சுமதியும் சேர்ந்து செலுத்தும் வாழ்க்கைத் தோணியின் இன்னிசைக் கீதந்தான் அது!

o

*அவள் பெண்; பெண்ணின் இதயத்தில் எத்தனை இன்ப ரகசியங்களோ? எத்தனை விதமான விருப்பு வெறுப்புக்களோ?*

# இதயச் சிறையில்

“நாங்கள் குற்றாலத்திற்குப் புறப்படுகிறோம். இந்தக் கோடை காலத்தை அங்கே கழிக்க ஆவல். தயவுசெய்து இயன்றால் நாங்கள் நாளை எக்ஸ்பிரசுக்கு வந்து எங்களைச் சந்தியுங்கள். அங்கு வந்த பிறகுதான் தங்குவதற்கு இடம் முதலிய வசதிகள் பார்க்க வேண்டும்” என்று பரமசிவம், கௌரியின் கணவர், சுப்பரத்தினத்திற்கு எழுதியிருந்தார். சுப்பரத்தினத்திற்குத் தென் காசியில் உபாத்தியாயர் உத்தியோகம். பிரம்மச்சாரி. தனியாகத்தான் மூன்று வருடங்களை அங்கே கழித்துவிட்டார். கோடை விடுமுறைகளுக்கு மட்டும் வெளியூர் சென்று நண்பர்களுடன் தங்கி வருவது வழக்கம்.

“எல்லோரும் வெயில் காலத்தில் குற்றாலத்தைத் தேடிக் கொண்டு வரும்போது, நாம் மட்டும் இதை விட்டு வெளியூர் போவானேன்? இந்த லீவுக்காவது குற்றாலத்தில் ஓர் அறையை எடுத்துக்கொண்டு நிம்மதியாய்ப் பொழுதைப் போக்கவேண்டும்” என்று நினைத்திருந்தார். அவருடைய நினைவுக்கு, இன்று வந்த அந்த எதிர்பாராத கடிதம் பெருமலர்ச்சியைக் கொடுத்தது. கடிதத்தைப் பல முறைகள் திருப்பித்திருப்பி வாசித்தார்.

“கௌரி வருவாள்! அவளுக்கு ஆணும் பெண்ணுமாய் இரண்டு குழந்தைகள் என்று கேள்வி; அவைகளும் வரும். அவள் கணவன்...ரொம்ப நல்ல மனிதராம்—எழுதியிருப்பதைப் பார்த்தாலும் அப்படித்தான் தெரிகிறது—அவரும் வருவார்; கடிதத்தில்,

தாங்கள் தங்குவதற்கு வேண்டிய வசதிகளைப் பார்த்து வைக்கச் சொல்லி, எவ்வளவு கண்ணியமாக, இங்கிதமான முறையில் எழுதியிருக்கிறர்!...ஆம், வெகுநாட்களுக்கப்புறம் இப்போதாவது இந்தராத்திரி இன்பமயமான பொழுது போக்கிற்கு ஓர் சந்தர்ப்பம் கிடைக்கப் போகிறதே!"

அன்று மாலையே குற்ருலத்தில் அவர்களுக்கென்று ஓர் அழகிய சிறு பங்களாவும், தனக்குத் தனியாக அறை ஒன்றும் பார்த்து வைத்தார். வேலைக்காரர்களுக்குச் சொல்லி, பங்களாவைச் சுற்றியுள்ள தோட்டத்தைத் துப்புரவு செய்யச் செய்தார். பூச்செடிகளுக்கு நீர் வார்ப்பது, செடிகளைக் கத்தரித்து விடுவது இவற்றைத் தாமே நேரில் இருந்து கண்காணித்தார்.

தென்காசிக்குத் திரும்புவதற்குள் நன்ருக இருட்டிவிட்டது. மாட்டுவண்டி ஒன்றை அமர்த்திக்கொண்டு அதில் சாய்ந்தவாறே திரும்பவும் அந்தக் கடிதம்பற்றி யோசித்தார். சாலை வழியின் இருண்ட நிழலும், அவற்றினூடே தெளிக்கப்பட்டிருந்த மங்கல் நிலவொளியும் அவருடைய யோசனைக்கு வர்ணம் பூசின. அதன் மத்தியிலிருந்தவாறே அவரது அழகுச்சித்திரம் கௌரி புன்னகை பூத்தாள்.

சுப்பரத்தினம் பெருமூச்சுவிட்டார். 'ஹூம்;...நாளை கௌரி வருவாள்' எனத் தனக்குள் முணுமுணுத்தார். பழைய சம்பவங்கள் அடுக்கடுக்காக அவர் முன்னே தோன்றி மின்னல்போல் நெளிந்தன.

சுப்பரத்தினமும் கௌரியும் ஒரே ஊரைச் சேர்ந்தவர்கள். அடுத்தடுத்தாற்போல் வீடுகள். தூரத்து உறவு வேறே.

சின்னஞ் சிறு பிராயம் முதல் ஒன்ருய் ஓடி விளையாடியவர்கள்; ஒருவர் மற்றவரின் கூட்டுறவில் ஆனந்தம் கண்டவர்கள்;

எப்போது பார்த்தாலும் இணை பிரியாமலே கை கோத்துக் கொண்டு தெருப் புழுதியெல்லாம் திளைந்தவர்கள்.

வயது வளர்ந்தது; அன்பும் வளர்ந்தது.

சுப்பரத்தினத்தைச் சித்தி தன்னோடு திருச்சிக்கழைத்துக் கொண்டான். அவன் படிப்பு திருச்சியில் நடந்தது. கௌரி உள்ளூரிலேயே படித்தாள்.—லீவுக்கு லீவு கௌரியும் சுப்புவும் சந்தித்தார்கள்; பேசினார்கள்; சிரித்தார்கள்; பரஸ்பரம் அன்பைப் பரிமாறிக்கொண்டார்கள்.

"இந்தா, உனக்கென்று பின்னிய கைக்குட்டைகள்; இன்னும் உன்னுடைய துண்டு, கைக்குட்டை, இருந்தால் கொடு. எல்லாவற்றிலும் பூப்போட்டுத் தருகிறேன்" என்பாள் கௌரி;

"இம்முறை பாரதி புத்தகம் கொண்டு வந்திருக்கிறேன்; வருகிறாயா, படிப்போம்" என்பான் சுப்பு.

வருடா வருடம் விதம் விதமான பூ வேலைகள் செய்த துணி மணிகளுடன் சுப்புவை வரவேற்பது கௌரிக்கு வழக்கம்; சுப்புவோ விதம் விதமான கதைகள், கவிதைப் புத்தகங்களுடன் அவளைச் சந்திப்பான்.

சுப்பு தன் வீட்டிற்கு வருவதற்குக் கொஞ்ச நேரம் ஆகிவிட்டால் அவளுக்குப் பொறுக்காது. "போய் நான் கூப்பிடுகிறேன் என்று அழைத்துக்கொண்டு வா" எனத் தம்பியை அனுப்புவாள். சுப்புவும் எவ்வளவு வேலை இருந்தாலும் அப்படியே போட்டுவிட்டு அவளிடம் ஓடுவான்.

ஒருநாள் சுப்பு கௌரியின் வீட்டிற்குப்போன சமயம் கௌரி தனியாகப் பெரிய நிலைக்கண்ணாடிக் கெதிரே நின்று தலைவாரிக் கொண்டிருந்தாள். அடர்ந்து கருண்ட கேசம், கார்முகிற் கூட்டம்

போல் பின்புறம் விழுந்து கிடந்தது. பக்கத்தில் திறந்தபடியே வாழையிலையில் வைக்கப்பட்டிருந்த மல்லிகை, அறை பூராவும் தன் மணத்தைப் பரப்பிக் கொண்டிருந்தது.

"ஆ, என்ன வாசனை!" என்று சொல்லிக்கொண்டே பின்புறம் போனவன், "இந்த மல்லிகையா இந்த மாதிரி மணக்கிறது?" என்று அதை மிருதுவாக எடுத்து முகர்ந்தான். முகர்ந்தபடியே அவன் கண்கள் கண்ணாடியை நோக்கின. அப்படியே பிரமித்துவிட்டான். கண்கள் இமைக்கவில்லை. பார்த்துக்கொண்டே இருந்தான்.

ஒரு பக்கம் சாய்ந்த தலை; பின்புறம் அவிழ்ந்து கருகருத்துக் கவிழ்ந்திருக்கும் தலைமயிர்; அதிலே படிந்து பாதியில் நின்றுவிட்ட சீப்பு; அதைப் பற்றியிருக்கும் மென்மலர்க் கரம்.—இத்தனை நாட்களாக இந்த அழகு, இந்தக் கவர்ச்சி, அவன் கண்களுக்குத் தெரியாமல் எங்கே ஒளிந்து கொண்டிருந்தது?

அவன் கண்களை அந்த நிலையில் அவளும் பார்த்து விட்டாள். ஒருமுறை கண்ணாடியில் தெரியும் தங்களது இருவரது பிரதி பிம்பங்களையும் கவனித்தாள். குப்பென்று அவள் கன்னங்கள் நாணத்தால் சிவந்தன. திடீரென்று சுப்புவின் பக்கம் திரும்பினாள். சுப்புவின் கண்ணிமைகள் அவளை எதிரிட்டு நோக்கத் திறனில்லாமல் கீழே மடிந்தன. அவன் அங்கு நிற்காமல் வெளியே வந்துவிட்டான்.

கௌரியும் வாய் திறக்கவில்லை. அவள் நெஞ்சு மட்டிலும் சற்று உயர்ந்தது. அவளது பெருமூச்சால் கண்ணாடியில் புகைப் படலம் சூழ்ந்தது.

அன்றிலிருந்து அவனால் அவளிடம் கலகலப்பாகப் பேச முடியவில்லை. அவளும் அதே கஷ்டத்திற்குள்ளானாள். ஒரு மெல்லிய பூந்திரை தங்களை மறைத்திருக்க அத்திரைக்கப்பால்

இருந்து அவர்கள், ஒருவர் மற்றவரைப் பற்றிய பகற்கனவில் ஆழ்ந்தார்கள்.

"நீ முன்போல் நான் படிப்பதைக் கவனித்துக் கேளாமல், என்னவோ அடிக்கடி பெரிய யோசனையில் ஆழ்ந்து விடுகிறாயே!" என்று அவன்மேல் குற்றம் சாட்டுவான் சுப்பு.

"யோசனையா?......இல்லை; ஒன்றுமில்லை!" என்று தன்னைச் சமாளித்துக்கொண்டு, நீயும் தான் முன்போலப் புரியும்படி சொல்வதில்லை; வேறெங்காவது நினைத்துக்கொண்டே போகிறாய்" என்று அதை அவன் மீதே திருப்புவாள்.

சுப்பு ஊர் திரும்பும் நாள் வந்தது.

"நான் போய் வருகிறேன் கௌரி" என்றான். இம்முறை இப்படிச் சொல்லும்போது ஏனோ அவன் குரல் நடுங்கியது.

"இதோ, இங்கே வா," என அவனை அருகில் அழைத்தாள். அவன் கோட்டுக்குள்ளே மடிந்திருந்த சட்டையின் கழுத்துப் பட்டையை வெளியே இழுத்து விட்டாள். தனக்கு வைத்திருந்த ரோஜாவில் ஒன்றை எடுத்துக் கோட்டில் சொருகினாள். "காப்பி மட்டிலும் தருகிறேன்; வேண்டாமென்று சொல்லாமல் குடித்து விட்டுப்போ" என்று கொண்டுவந்து கொடுத்தாள்.

"அடுத்த லீவில் எனக்கு என்னென்ன புத்தகம் கொண்டு வருவாய்?"

"தாகூர்."

"நிறையக் கொண்டு வரவேண்டும்!"

"நிச்சயமாய்!"

உயிருக்குயிரான ஒன்றைப் பறி கொடுத்தவன்போல் சுப்பு மனமில்லாமல் நடந்தான். கௌரி அவன் தெரு முனையில் திரும்பும்வரையில் ஜன்னல் வழியாய்ப் பார்த்துக் கொண்டே இருந்தாள். இம்முறை அவன் பழைய சுப்பு அல்ல; பழைய பால்ய நண்பன் அல்ல; ஏதோ ஒன்றை அவளிடமிருந்து திருடிக் கொண்டு, ஏதோ ஒன்றை அவளிடம் திருட்டுக் கொடுத்து விட்டுப் போகிறான்.

ஆடிக்கொண்டே மேடு பள்ளத்தில் சென்ற மாட்டு வண்டியில் உட்கார்ந்து சுப்பரத்தினம் எல்லாவற்றையும் நினைத்துப் பார்த்தார். அவர் அந்த முறை அவளிடம் விடை பெற்றுக் கொண்டு வந்ததுதான் கடைசி முறை. அதற்கப்புறம் பள்ளிக் கூடத்திற்கு அவளுடைய கல்யாணப் பத்திரிகை வந்தது. விடு முறைக்கு எடுத்துச் செல்லவேண்டிய தாகூர் புத்தகங்களைத் திருமணப் பரிசாக அனுப்பி வைத்தார்.

“நாம் தான் அவளைக் காதலித்தோம்; அதை அவள் தெரிந்து கொள்ளவும் இல்லை; அவள் நம்மைக் காதலிக்கவும் இல்லை! பழைய பால்ய சிநேகத்தின் வளர்ச்சிதான், அவள் நம்மிடம் காண்பித்ததையெல்லாம். — கௌரி! உன் நினைவு அழகானது; அழியா அழகைப் பெற்றது” என்று அப்போது தனக்குள் சொல்லிக்கொண்டார்.

ஆனால் அதே நினைவு அவரிடம் ஸ்திரமாகவும் இல்லை.

“கடைசி முறையாக அவள் நடந்து கொண்டவிதம், அவள் கண்ணோக்கு, அவள் பெருமூச்சு, — இவையெல்லாம் எதைக் காண்பித்தன? காதலையல்லவா! — எதைத்தான் சொல்ல முடியும்? அவள் பெண்! பெண்ணின் இதயத்தில் எத்தனை எத்தனை இன்ப ரகசியங்களோ? எத்தனை விதமான விருப்பு, வெறுப்புகளோ? கௌரி! அன்று உன் உள்ளத்தில் நடந்த விசித்திரமான ஜாலங்களை நான் என்று தெரிந்துகொள்ளப் போகிறேனோ?”

எக்ஸ்பிரசுக்குச் சென்று ஸ்டேஷனில் காத்திருந்தார். கடிதத்தில் குறிப்பிட்டபடி பரமசிவம் வரவில்லை. கௌரியும், குழந்தைகளும் மட்டும் வந்திருந்தனர். கௌரியின் உருவத்தில்தான் எத்தகைய மாறுதல்! எவ்வளவு புனிதமான தாய்மையை அவள் முகம் தாங்கியிருந்தது!

"எங்கே அவர் வரவில்லையா? கடிதத்தில் எழுதியிருந்தாரே!"

"வண்டிக்குப் புறப்படுகிற சமயத்தில் அவருக்கொரு வேலை வந்தது; இன்னும் இரண்டுநாளில் வந்துவிடுவார்."

"எல்லோரும் ஒன்றாய் வரக்கூடாதா?"

"நானும் அப்படித்தான் சொன்னேன். 'எதற்கு, புறப்பட்ட பிறகு நிற்பானேன்? சீக்கிரந்தான் நானும் வந்துவிடுவேனே' என்று அனுப்பினார்."

பங்களாவிற்கு வந்து இரண்டுநாட்களாகிவிட்டன. இன்னும் மூன்று தினங்கள் கழித்துத்தான் வரமுடியும் என்று பரமசிவம் அறிவித்திருந்தார். இந்தத் தடவை கட்டாயம் வந்துவிடுவதாகவும்; அதுவரை சிரமத்திற்கு மன்னிக்கும்படியும் சுப்பரத்தினத்தைக் கேட்டிருந்தார்.

நான்காவதுநாள் மாலை சுப்பரத்தினம் கௌரியுடன் குழந்தைகளை அழைத்துக்கொண்டு வெளியே உலவப் போனார். தூரத்தில் அருவியின் இசை ஒலித்தது. எல்லோரும் அங்கே கிடந்த பாறைகளில் அமர்ந்தார்கள்.

"ஆமாம், நீங்கள் ஏன் என் கலியாணத்துக்கப்புறம் ஒரு தரம்கூட வீட்டிற்கு வரவில்லை? வரக்கூடாதா?" என்றாள்.

“வரக்கூடாது என்றில்லை. முதலில் படிப்பு. படிப்புமுடிந்தவுடன் வேலை. மத்தியில் கொஞ்சநாளாவது சும்மாயிருந்தாலல்லவோ வருவதற்கு? வரவேண்டும் என்கிற ஆவல்தான்; என்ன செய்வது?”

பேச்சு இப்படியே போய்த் தங்களது பழைய நாட்களின் சம்பவங்களைத் தொட்டது.

“நான் கேட்ட அந்தப் புத்தகங்களை மறந்துவிடாமல் என் கல்யாணத்திற்கு அனுப்பிவிட்டீர்களே!” என்ருள் கௌரி.

“மறப்பதா? எப்படி மறப்பது?” என்று தன்னையும் அறியாமல் சொல்லிவிட்டார் சுப்பரத்தினம்.

“என்ன!”-அவள் கேள்வியில் ஒரு வேகம் இருந்தது.

“ஒன்றுமில்லை...” என்று சிரிக்க முயன்ருர்.

சற்று நேரம் இருவரிடையேயும் மௌனம் நிலவியது. சுப்பு அவளை நேருக்குநேர் பார்க்கவியலாமல் சுற்று முற்றும் நோக்கினர்.

“இல்லை, நீங்கள் என்னவோ சொல்ல விரும்புகிறீர்கள்; ஆனல்...”

“ஆம்; விரும்புகிறேன். ஆனல் வேண்டாம்.”

“பரவாயில்லை; எதை வேண்டுமானலும் சொல்லுங்கள்.”

“இல்லை கௌரி, என் மனம் இடங்கொடுக்கவில்லை.”

அவள் ஊகித்துக்கொண்டாள்.

“தாராளமாய்ச் சொல்லுங்கள்; உங்களிடமிருந்து நான் விரும்பாத, அல்லது நீங்களே விரும்பாத ஒன்றுமே வெளிவராது.”

"உன்னிடம் ஒன்று கேட்கலாமா?"

"ஒன்றல்ல; ஆயிரம் வேண்டுமானாலும்..."

"நான்—நான் உன்னை அந்த நாளில் காதலித்தேன்.—நீ?"

"காதலித்தீர்களா!"

"..............."

"அந்த நாளில்........."

"ஆம்"

"நான்; நானுந்தான்!" — அவள் தடுமாறினாள்.

"நீயுமா! கௌரி...போதும்!"

"உங்கள் மனதை நீங்கள் திறந்துகாட்டவில்லையே!"

"நீ?"

"...................."

"கௌரி, என்னை மன்னித்துவிடு! உன்னிடம் என்றாவது இதைத் தெரிந்துகொள்ள முடியுமா என ஏங்கினேன். அந்த நாளும் வந்தது. தெரிந்துகொண்டேன். இனி எனக்கு வாழ்க்கையில் ஒரு குறையுமில்லை. — நாளைக்கு அவர் வந்த பிறகு நான் சென்னை செல்கிறேன்."

"சென்னைக்கா? ஏன்? இந்த லீவு பூராவும் எங்களுடன் இருக்கப்போவதாகச் சொன்னீர்களே!"

"ஆம் சொன்னேன். ஆனால் இருக்கமுடியாது......இன்று நான் பெற்ற மகிழ்ச்சியைத் தொலைவில் இருந்துதான் அனுபவிக்க வேண்டும்!"

அவளுக்கு என்ன புரிந்ததோ என்னவோ, "சரி; உங்களிஷ்டம்" என்று திடமாகச் சொன்னாள்.

மறுநாள் பரமசிவம் வந்தபிறகு, சுப்பரத்தினம் சென்னைக்கு ரெயில் ஏறினார். ஏறியவுடன் அவர் நெஞ்சு தனக்குள் கீழ்க்கண்ட விதமாகச் சொல்லிக்கொண்டது:

"என்றோ ஒரு நாள் கௌரி என்னைக் காதலித்தாள். நான் அவளை அன்றும் காதலித்தேன்; இன்றும் காதலிக்கிறேன். ஆனால் காதலுக்கு நான்கொண்டுள்ள அர்த்தம் அநேகருக்கு விளங்காது."

●

*போலீஸுக்குப் பயந்து தலை மறைவாக அவன் ஓடிவந்த ஒன்றரை வருஷமாகப் போகிறது. அப்போது அவளுக்கு ஆறுமாதம்.*

# தலை மறைவில்

ரெயில் வண்டி வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. உள்ளே கூட்டமோ சொல்லிமுடியாது. இடித்துப் புடைத்துக்கொண்டு மூச்சுவிடக்கூட வசதியில்லாமல் திணறியது. வண்டியின் ஒரு ஓரத்தில் ஜன்னலுக்குப் பக்கமாய் பக்கிரி ஒருவன் உட்கார்ந்திருந்தான். பார்வை ஜன்னலுக்கு வெளியே இருந்தது. முதுகுப் புறத்தில் யாரோ ஒரு பருத்த மனிதர் சாய்ந்துகொண்டு, தூங்கி விழுவதும் விழித்துக்கொள்வதுமாயிருந்தார்.

இந்த நெருக்கடி போதாதென்று டிக்கட் பரிசோதகன் வேறு வந்து சேர்ந்தான். பக்கிரியைப் பார்த்தவுடன் அவன் கண்களில் சந்தேகம் தட்டியது.

"டிக்கட் வச்சிருக்கியா?" என்றான் கடுமையான குரலில்.

"இருக்குதுங்க."

பக்கிரி ஒரு துணியில் தான் போட்டு வைத்திருந்த ஒன்பது முடிச்சுகளை அவிழ்த்து, அதிலிருந்து டிக்கட்டை எடுத்துக்கொடுத்தான்.

டிக்கட் பரிசோதகனுக்குக் கோபம். தன் சந்தேகம் பலிக்கவில்லையே என்று ஒருபுறம்; தன்னை இப்படி கால்மணி நேரம் நிற்கவைத்துவிட்டானே என்பது மறுபுறம்.

"இந்தா, எங்கேயும் இது ஓடிப்போயிடாது! சும்மா ஒரு முடிச்சோடு நிறுத்திக்கோ" என்று அவன் முகத்தில் வீசி எறிந்தான்.

"சரிங்கோ!"

தன் முகத்தில்பட்டுக் கீழேவிழுந்த டிக்கட்டை தேடிப்பிடித்து பக்கிரி மறுபடியும் முடிச்சுப்போட ஆரம்பித்தான். அதே ஒன்பது முடிச்சுக்கள்!

## 2

வண்டி முன்போலவே வேகமாய் ஓடிக்கொண்டிருந்தது. பக்கிரி வெளியே இருந்த தலையை உள்ளுக்கு இழுத்துத் தன்னையே ஒருதரம் பார்த்துக்கொண்டான். இடுப்பில் நைந்துபோன கைலி வேஷ்டி, மேலே பல ரகத் துணிகளில் ஒட்டுப் போட்டுத் தைத்த பழைய சட்டை, தலையில் முண்டாசு.

அவனுக்குப் பக்கத்தில் துணியால் சுற்றப்பட்ட மயில்இறகுச் சேர்க்கை ஒன்றிருந்தது. அதை அடிக்கடி தொட்டுப் பார்த்துக் கொள்வதும், ஒன்றிரண்டாய் வளர்ந்திருந்த தன் தாடியைத் தடவிக் கொடுப்பதுமாக இருந்தான். அவன் வயது திட்டமாக மதிப்பிடக்கூடியதாக இல்லை. சுமார் முப்பதிலிருந்து நாற்பத்தைந்துக்குள் எதை வேண்டுமானாலும் சொல்லலாம்.

திடீரென எதையோ நினைத்துக்கொண்டவன்போல் பக்கிரி தன் கண்களாலேயே வண்டிக்குள் துழாவினான். எதிரே இருந்த ஸீட்டுக்குப் பின்புறம் ஒரு பெண்பிள்ளை தன் குழந்தையை வைத்துக் கொஞ்சிக்கொண்டிருந்தாள். அவளைச் சூழ அத்தனை கூட்டம் இருப்பதைப் பற்றியும் அவளுக்குக் கவலையில்லை. மார்போடு குழந்தையை அணைத்தாள்; உச்சிமோந்தாள்; முத்தமாரி பொழிந்தாள். அவளது அன்புப்பெருக்கால் சிசு திக்குமுக்காடிக்கொண்

டிருந்தது. அந்தக் குழந்தையையே சற்று நேரம் உற்றுப்பார்த்துக்கொண்டிருந்த பக்கிரி வேறு பக்கம் திரும்பினான். அங்கும் ஓர் குழந்தை அவன் கண்ணில்பட்டது. அது தன்னைத் தூக்கி வைத்திருந்தவரின் தலைமயிரைப்பற்றி இழுப்பதிலும், அவர் மூக்கைக் கடிப்பதிலும் மும்முரமாக முனைந்திருந்தது.

திரும்பிய பக்கமெல்லாம் பக்கிரி குழந்தைகளையே அக்கறையோடு கவனித்தான். ஜன்னலுக்கு வெளியே வயல் வெளிப் பக்கங்களில், உழத்தியர்கள் தங்கள் குழந்தைகளை மரங்களில் தொட்டிலிட்டுத் தூங்க வைத்திருந்தனர். ஒவ்வொரு சமயம் புருஷனுக்குக் கஞ்சி ஊற்றிக்கொண்டிருக்கும் மனைவி, தன் குழந்தைக்கும் அதே சமயம் பால் கொடுக்கும் காட்சியும் அவன் கண்களில் பதிவதுண்டு! எல்லாம் அவனுக்கு இப்பொழுது ஒரே குழந்தைகள் மயம்.

## 3

பக்கிரியின் தலைக்குப் பின்புறத்திலிருந்து "வீல்" என்று ஒரு குழந்தையின் அழுகுரல் எழுந்தது. அவசரமாய்த் திரும்பிப் பார்த்தான். பக்கத்து ஸ்டேஷனில் வண்டியில் ஏறிய பட்டிக்காட்டு ஸ்திரீ ஒருத்தி தன் குழந்தையுடன் கூட்டத்தில் இடிபட்டுக் கொண்டிருந்தாள். குழந்தைக்கு நெருக்கம் தாங்க முடியவில்லை. அதைத்தான் அழுகையின் மூலம் அறிவித்தது.

"பாவம்! ஏம்மா குழந்தையோட நின்னுக்கிட்டு கஷ்டப் படறே? இங்கே வந்து உட்காரேன்; நான் வேணும்னா நின்னுக்கிறேன்" என்று இடத்தைவிட்டு எழுந்தான் பக்கிரி.

இந்த மாதிரி அசந்தர்ப்பமான சமயத்தில் இரக்கங்காட்டத் தொடங்கியிருக்கும் ஓர் பிராணியை அருகிலிருப்பவர்களெல்லாம் ஆச்சரியத்தோடு வேடிக்கை பார்த்தார்கள். பக்கிரி அதைச் சட்டை செய்யவில்லை. எல்லோரையும் கெஞ்சிக் கேட்டுக்கொண்டு

அவள் வருவதற்கு வழி செய்துகொடுத்தான். வந்து உட்கார்ந்தவுடன் தன்னுடைய மயில்தோகையை எடுத்துக் கட்கத்தில் இடுக்கிக்கொண்டு ஒற்றைக்காலில் நின்று தவம் புரியலானான்.

அவன் மனம் இப்போது கொஞ்சம் அமைதியுற்றிருந்தது. அந்த அமைதியிலே பலபல எண்ணங்கள் முளைக்கத்தொடங்கின.

“சுந்தரிக்கும் இப்போது கையில் இதைப்போலத்தான் ஒரு குழந்தையிருக்கும். அப்போது அவளை விட்டுவரும் சமயம்—அவளுக்கு ஆறுமாதம். இப்போது சரியாக ஒன்றரை வருஷமாகப் போகிறது. குழந்தைக்கு வயசு ஒரு வருஷமும் இரண்டு மாதமும்...குழந்தை ஆணோ, பெண்ணோ? கருப்போ சிகப்போ? முகச்சாயல் அவளைப்போல் இருக்கிறதோ, என்னைப் போலவோ?...குழந்தை ஒரு கஷ்டமும் இல்லாமல் சுகப்பிரசவமாயிருந்தால்தான்போச்சு. இல்லாவிட்டால்...அப்படியும் இருக்கலாமோ?...சே! என்ன பயங்கரமான, வேண்டாத நினைவுகள்... நிச்சயமாய் எதைத்தான் சொல்லமுடியும்? இந்தப் பதினெட்டு மாச காலத்தில் என்னென்ன மாறுதல்களோ? கடிதமாவது போட வழியுண்டா? அதை வைத்துக்கொண்டு மோப்பம் பிடித்துவிடுவார்களே, போலீஸ் புலிகள்! எந்த நேரமும் காவலும் கட்டுப்பாடுமாய்த்தான் இருக்கும். ஈ, எறும்புகூடக் கண்காணிப்பு இல்லாமல் உள்ளே நுழைய முடியாது. எத்தனை எத்தனை கஷ்டங்களோ? உருட்டல் மிரட்டல்களோ...தேசம்! சுதந்தரம்! விடுதலைக் கிளர்ச்சி!—பயன்? தலைமறைவு! போலீஸ் வேட்டை, அகப்பட்டுக்கொண்டால் ஜென்மத் தீர்ப்போ, தூக்கு மேடையோ?—பாவிகள்! உண்மையை உருக்குலைக்கும் துரோகிகள்!”

மனசின் நினைவுகளைக்கூட மற்றவர்கள் அறிந்து கொண்டுவிடுவார்களோ எனப் பயப்படுபவன்போல் பக்கிரி அப்போது விழித்தான். பிறகு வெளியே பார்த்ததில், தன் ஊர் வருவதற்கு

இன்னும் கொஞ்சநேரந்தான் இருந்தது. மேலே வானம் இருண்டு கொண்டு வந்தது. கடமுடாவென்று இடையிடையே இடிச்சப்தம் வேறே.

"ஊர் போய் நாம் இறங்குவதற்கும், மழை பெய்யத் தொடங்குவதற்கும் சரியாய் இருந்தால் தேவலையே" என எண்ணியவனாய் ஆவலோடு மேகத்திரளை நோக்கினான். ஊர் வரும்வரையில் வானம் காத்திருக்கவில்லை. கொட்டு கொட்டென்று கொட்டித் தீர்த்துவிட்டது.

## 4

ஸ்டேஷனில் இறங்கிச் செல்வதற்குள் தொப்பை தொப்பையாய் நனைந்துவிட்டான் பக்கிரி. மழைக்கு ஒதுங்குபவன்போல ஓர் குறிப்பிட்ட வீட்டின் வெளித் தாழ்வாரத்தில் போய் மூலைப் பக்கம் ஒதுங்கினான். அவன் உடல் வேகமாக நடுங்கியது. நடுக்கத்தின் காரணம் மழைத் தண்ணீரா, அல்லது அவன் உள்ளத்தில் ஏற்பட்ட பரபரப்பா என்று தெரியவில்லை.

தலையை மெதுவாகத் திறந்த ஜன்னல் பக்கம் நீட்டினான். அப்படியே அவன் உடல் விறைத்துப்போய் நின்றுவிட்டது.—எந்த நேரத்திலும் விசாரணைதானா? அல்லது தன்னுடைய துரதிர்ஷ்டத்திற்கென்றே இப்போது வந்திருக்கிறார்களா?

போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் உள்ளே நாற்காலியில் உட்கார்ந்து ஏதோ கடிதக் கட்டுகளையும், காகிதங்களையும் புரட்டிக் கொண்டிருந்தார். பக்கத்தில் இரும்புச் சிலைகள்போல் இரு ஜவான்கள் நின்றுகொண்டிருந்தனர். எதிரே ஓர் வயதுவந்த ஸ்திரீ நின்றபடியே கேள்விக்குப் பதிலளித்துக்கொண்டிருந்தாள்

"உங்கள் பையனைப்பற்றி மேற்கொண்டு ஏதாவது தகவல் தெரியுமா?"

"ஒண்ணும் தெரியாதுங்களே!"

"எப்போக் கேட்டாலும் இப்படித்தானே சொல்றீங்க?"

"தெரிஞ்சாத்தானுங்களே சொல்றதுக்கு! இந்த ஒண்ணரை வருஷமாப் பார்த்த கண்ணும் பூத்துப்போச்சுங்களே!"

சர்க்கிள் வருத்தப்படுபவர் போல் பாவனை செய்தார். குரலை உருக்கமாக வைத்துக் கொண்டார். "பாவம், பிறந்த குழந்தையைக்கூட பார்க்கணும்னு அவருக்குத் தோணலையோ?" என்று சொல்லிப் பெருமூச்சு விட்டார்.

"மருமகளுக்கு அவன் போனதிலிருந்தே புத்தி ஒண்ணும் சரியாயில்லே: குழந்தையை எடுத்து வச்சிக்கிட்டு அழுது புலம்புவதுதான் அவளுக்கு வேலே. இந்தக் கஷ்டம் போராதுன்னு மூணு நாளாக் குழந்தைக்குக் கடுமையான ஜுரம். கண்ணைத் திறக்க மாட்டேங்கறது."

பக்கிரியின் நெஞ்சில் இந்த வார்த்தைகள் நெருப்பைக் கொட்டின. மேலே சர்க்கிள் பேசிய வார்த்தைகளைக் கவனித்தான். சர்க்கிள் பேசினார்:

"வக்கீலுக்குப் படிச்சுட்டு எந்தப் பிள்ளையாவது இந்த மாதிரிக்காரியங்களில் ஈடுபடுமா? ஒண்ணு, ஒழுங்காகத் தொழிலைப் பார்க்கணும்; இல்லாட்டி இருக்கிற சொத்தையாவது பார்த்துக்கிட்டு பெண்டாட்டி பிள்ளையோட சுகமா யிருக்கணும். தேசமாம், தேசம்!...சீக்கிரம் அகப்பட்டாரோ அவருக்குத்தான் நல்லது; இல்லாட்டா என்னைக் குத்தம் சொல்லாதீங்க!"

சூடாக வைத்திருந்த காப்பியை எடுத்துக் குடித்துவிட்டு, சர்க்கிள் புறப்பட ஆயத்தமானார். உடனே, ஏதோ நினைத்துக் கொண்டவர்போல் "சமீபத்திலே அவர் எடுத்த போட்டோ எனக்கு ஒண்ணு வேணுங்களே" என்றார்.

சமீபத்தில் எடுத்த போட்டோ! வெளியில் பக்கிரிக்குப் பகீரென்றது. சமீபத்தில் கல்யாணத்துக்கப்புறம் வேறொன்றும் எடுக்கவில்லையே! கல்யாணத்தன்று நானும் அவளும் எடுத்துக் கொண்டது தானே?

இன்ஸ்பெக்டர் எழுந்து அறையில் மாட்டியிருந்த படங்களைப் பார்த்துக்கொண்டே வந்தார். பெரும்பாலும் மாணவப் பருவத்தில் நண்பர்கள் கூட எடுத்தவை. கல்யாணப்படம் ஒன்றுதான் அவர் தேவைக்கு ஏற்றதாயிருந்தது. அதைக் கையில் எடுத்துக் கொண்டு ‘இதற்கப்புறம் அவர் மாத்திரம் தனியாக இருந்து ஏதாவது எடுத்திருக்கிறாரா?” என்றார்.

“இல்லிங்களே.”

“அப்படியானால் இன்னும் இரண்டு நாளையில் இதைத் திருப்பி அனுப்புகிறேன். அவர் படம் எங்களுக்கு காப்பி எடுக்கணும்.”

இந்தச் சமயத்தில் கதவிடுக்கிலிருந்து ஓர் யுவதியின் கண்கள் “அவரையுந்தான் என்னிடமிருந்து பறித்து விட்டார்கள்; அந்தப் படத்தையாவது விட்டு வைக்கக் கூடாதா?” என்பதுபோல் அந்தப் படத்தை நோக்கின. வெளியில் நின்ற பக்கிரியும் புழுங்கும் உள்ளத்தோடு அதைக் கவனித்தான்.

படத்தில் “ராகவன் — சுந்தரி திருமணத்தன்று” என்று தேதியும் குறிப்பிட்டு பொன்னிறத்தால் அச்சாகியிருந்தது.

மகஜரும் ஓய்ந்தது. போலீஸாரும் புறப்பட்டனர். முன்பே சந்தேகத்திற்கிடம் கொடாமல் தெருப்பக்கம் நடக்க ஆரம்பித்தான்.

## 5

“நாகூர் ஆண்டவருக்குத் தர்மம் தாயே......!”—பக்கிரியின் குரல் தெருப்பக்கம் கரகரப்புடன் ஒலித்தது.

கையில் தகரக் குவளையை வைத்துக்கொண்டு அதில் இரண்டு காலணுக்களைப் போட்டுச் சத்தம் செய்தபடியே தெருவோரத்தில் மெதுவாய் நடந்தான். குவளையில் காலணு போட்டவர்களுக்குக் கொஞ்சம் சர்க்கரையும், மயிலிறகினுல் ஆசீர்வாதமும் கிடைத்தன.

"பக்ஷி தோஷம், பார்வை தோஷம், குழந்தைக்கு எல்லாத் தோஷமும் ஆண்டவன் கிருபையால் பறக்கும்...மஹான், நாகூர் ஆண்டவர்!" என்று சொல்லிக்கொண்டு தாய்மார்களின் இடுப்பிலுள்ள சிசுக்கள் முகத்தில் மந்திரித்து ஊதினுன்.

கடைசியாக அந்தி மயங்கின சமயத்தில் பக்கிரியின் கால்கள் அவன் முன்பு மழைக்கு ஒதுங்கிய வீட்டின் முன்பு கொண்டு வந்தன. வாசலில் நின்றவாறே சத்தமிட்டான்.

"கரை காணுக் கப்பலைக் கரைசேர்த்த தெய்வம் நாகூர் ஆண்டவர்!.........தாயே, பக்கிரி தர்மம் தாயே! குழந்தைக்குப் பார்வை தோஷம், பக்ஷிதோஷம் இருந்தாக் கொண்டாங்கோ ஆண்டவன் அருள் செய்வார்!"

பயபக்தியோடு வீட்டிலிருந்து பெரிய அம்மாள் வெளியே வந்தாள். "குழந்தை உள்ளே காய்ச்சலாப் படுத்திருக்குதுங்க; கொஞ்சம் உள்ளே வர்ரீங்களா?" என்ருள்.

"சந்தோஷம் தாயே!"

உள்ளே போய்ப் படுக்கையில் குழந்தையையும், பக்கத்தில் கண்ணீரும் கம்பலையுமாய் உட்கார்ந்திருந்த அதன் தாயாரையும் பார்த்தான் பக்கிரி. இதயம் குபீரென்று மேலே கிளம்பித் தொண்டையைக் கவ்விக் கொண்டது.

"சுந்தரம்............!" என்ருன் தன்னைத் தேற்றிக் கொண்டு.

சுந்தரியும், அவள் மாமியும் திடுக்கிட்டுப் போய்ப் பக்கிரியைப் பார்த்தனர். உதட்டின் மேல் விரலை வைத்து சமிக்ஞை

செய்துவிட்டு, வலது புருவத்தின் மத்தியிலிருந்த தழும்பைக் காண்பித்தான்.

அருகில் மாமி இருப்பதைக்கூட கவனியாமல் அவனைத் தாவி இறுக அணைத்துக்கொண்டாள் சுந்தரி. கண்ணீர் ஊற்றெடுத்துப் புரண்டது.

“குழந்தைக்கு என்ன பெயர்?”

“நீங்கள் இல்லாமல் பெயர் வைப்பதா?”

பையனைத் தூக்கி முத்தமிடும் போது அவனுடைய உடல் உஷ்ணம் பக்கிரியைத் தாக்கியது. “கண்ணன்னு கூப்பிடுங்கோ, இவனுக்கு ஒரு கஷ்டமும் வராது—இந்தா விபூதி” என்று சுந்தரிக்கும், குழந்தைக்கும் நெற்றியில் இட்டான். பக்கிரியின்—ராகவனின்—தாயார் அவனுக்கு இட்டாள்.

“கவலைப்படாதீங்க, சீக்கிரம் திரும்பிடறேன்” என்று சொல்லிக்கொண்டே அவசர அவசரமாக விடைபெற்றுக் கொண்டான் பக்கிரி.

நாகூர் ஆண்டவர் பெயரை அவன் வாய் முனக, கால்கள் படியை விட்டுத் துரிதமாகக் கீழே இறங்கி நடந்தன.

சற்று தூரம் போவதற்குள் இரண்டு ரகசியப் போலீஸார் அவனைக் கைதட்டிக் கூப்பிட்டனர். திரும்பி வந்தான். நெஞ்சைப் பயம் தின்றது.

“அந்த வீட்டிலே என்ன சொன்னீங்க?” என்றான் ஒருவன்.

“நம்பள் பிள்ளைக்கு துன்னூர் மந்திரிக்கக் கொடுத்தான்” என்றான் பக்கிரி.

“பின்னங்கி ஏதும் கேட்டாங்களா?” என்றான் குத்தலாகப் போலீஸ்.

"ஆமா, ஜோஸ்யம் கேட்டான். நம்பள் சொன்னான்."

"என்ன கேட்டான்; நிம்மள் என்ன சொன்னான்?"

"பெரிய புள்ளே ஓடிப்பூட்டான், வருவானா, மாட்டானான்னான்."

"உம்........!"

"நம்பாதே; மாட்டான்னு சொன்னான்."

"மாட்டானா?"

"உம்"

"ஏன்?"

"செத்துப்பூட்டான்!"

"உனக்கு எப்படித் தெரியும்?"

"நிம்பள்கி ஜோஸ்யம் சொன்னான்!"

"சரி, போய்த் தொலே; செத்தவனைப் புடிக்கவா பத்துப்பேர் காவல்!"

குழந்தை ஞாபகம் வந்தவுடன் பக்கிரியின் குரல் கரகரத்தது. கலங்கிய கண்களோடு, "பகவான் நாகூர் ஆண்டவன் காப்பான்!" என்று உரத்த சத்தமிட்டுக் கொண்டே நடந்தான்!—ஜன்னல் புறமிருந்து கண்ணிமைக்காமல் நோக்கிக் கொண்டிருந்த சுந்தரிக்கும், அவள் மாமிக்கும் அந்தக் குரல் ஆண்டவன் குரலாகவே ஒலித்தது.

●

*எல்லா நினைவுகளும் நிலைபெயர்ந்து வீழ்ந்த இக்கணத்தில் என்னுள் ஓர் ஆசை பிறக்கிறது. இது தவறாக இருக்கலாம். தவறு என்பதற்காக ஆசை அடங்கி விடுவதோ அல்லது அழிந்துவிடுவதோ இல்லையே?*

# இரு சகோதரிகள்

சந்தடி மிகுந்த தெருவின் வழியே நானும் என் நண்பனும் அவசர அவசரமாகப் போய்க்கொண்டிருந்தோம். அந்தத் தெருக் கோடியில் சினிமாத் தியேட்டர். அதற்குப் போகத்தான் அத்தனை அவசரம். எங்களைப்போலவே இன்னும் பல அவசரப் பிராணிகள் தங்கள் தங்கள் காரியங்களின்மேல் கண்ணாகக் குறுக்கும் நெடுக்கும் போய்க்கொண்டிருந்தார்கள்.

எதிரே வரும் ஜனக் கூட்டத்தின் மத்தியில் இரு பெண்கள். அவர்களும் வேகமாகத்தான் வந்துகொண்டிருந்தார்கள். எல்லோரையும் பார்ப்பதுபோலவே கண்கள் அவர்களையும் பார்த்தன. நான் முதலில் நம்பவில்லை. நன்றாக உற்றுப்பார்த்தேன். அவளும் — அவர்களில் ஒருத்தியான கிளோராவும் — என்னைப் பார்த்துவிட்டாள். அப்போது என்னுடைய நிலைமை எப்படியிருந்தது என்று என்னால் சொல்வதற்கில்லை. அதை நண்பன்தான் கூறினான். அவன் அந்த மின்வெட்டு நேரத்தில் எங்கள் இருவரையுமே கவனித்திருக்கிறான். இருவருடைய அந்த விசித்திரமான மாறுதலைப் பற்றியுமே பின்னால் கூறிச் சிரித்தான். அவனுக்குச் சிரிக்கத்தான் தெரியும். எங்கள் நிலையில் அவன் இருந்தால்—?

அவள் அந்த விநாடியில் நடந்துகொண்டவிதத்தைச் சொல்கிறேன்:

முதலில் தன் வேகம் அத்தனையும் மறந்து அப்படியே நின்ருள். என்னை ஒருவிதமாக, இல்லை, பலவிதங்களாக நோக்கினள். கண்கள் முதலில் சிரித்தன; பிறகு கோபத்தால் சிவந்தன; கடைசியாகத் துக்கத்தால் அழுதன. பின்பு தன்னையும் சுற்றியுள்ள அவசர உலகத்தையும் அறிந்து கொண்டவள்போல் விடுவிடென்று நடந்தாள் தோழியுடன்.

என் தோளைப் பிடித்துக் குலுக்கி நண்பன் சினிமாக் கொட்டகைக்கு இழுத்துச் சென்ருன். அங்கு நான் சினிமாவா பார்த்தேன்?

திரையில் படம் ஓடிக்கொண்டிருந்தது. ஜனங்கள் அமைதியாக அதை அநுபவித்துக் கொண்டிருந்தார்கள். கொட்டகைக்குள் சுற்றிலும் இருள். அந்த இருளின் மத்தியில் திரையொளியில் படம் ஓடுவதைப்போலவே என் மன இருளில் வேருெரு படம் ஓடியது.

2

இதைப்போலவேதான் இரண்டு வருஷங்களுக்கு முன்பு இரு பெண்களை வழியில் சந்தித்தேன். அவர்களில் ஒருத்தியைத்தான் இன்று மீண்டும் பார்த்தது.

இளேரா, அவள் எங்கே? உன்னுேடு எப்போதும் நிழலாகத் தொடர்ந்து வரும் உன் சகோதரி எங்கே? அவள் வரமாட்டாளா? இனிமேல் என்றுமே உன்னுேடு ஒன்ருய் வீதிகளில் ஒய்யாரமாக நடந்து வரமாட்டாளா? அந்தக் காட்சியை — முதல் முதலாக நீயும் ஹம்ஸாவும் ஒன்ருய்ப் புத்தகங்களுடன் பள்ளிக்கூடத்திலிருந்து குதித்துக்கொண்டே திரும்பிவந்த காட்சியை — நான் மீண்டும் என்று காண்பேன்! யாரோ ஒருத்தி இன்று உன்னுேடு வந்தாளே, அந்த அழகு, அந்தக் கம்பீரம், இன்றைக்கு உங்களிடம் இல்லையே!

கிளோரா, உன் தமக்கை போய் விட்டாள். இந்த ஜன்மத்தில் இனி நான் அவளை உன்னுடன் காணமுடியாது. இன்று நமது சந்திப்பின்போது முதலில் அவளுடைய நினைவுதான் எனக்கு எழுந்தது. ஆனால்...ஆனால்...அத்துடன் நிற்கவில்லை. நான் அங்கே உன்னைப் பார்க்காமல், உன் சகோதரி ஹம்ஸாவைத்தான் பார்த்தேன். உன் கண்கள், உன் முகம், ஏன்?—உன் அங்கத்தின் ஒவ்வோர் அணுவும் ஹம்ஸாவேதான்! இரண்டு வருஷங்களுக்கு முன்பு கடைசியாக ஹம்ஸாவைப் பார்த்தபோது அவள் எப்படி இருந்தாளோ, அப்படியே இன்று நீ இருக்கிறாய். இன்னொரு விஷயம்: எல்லா நினைவுகளும் நிலைபெயர்ந்து வீழ்ந்த இந்தக் கணத்தில் என்னுள் ஓர் ஆசை பிறக்கிறது. இது தவறாக இருக்கலாம். தவறு என்பதற்காக ஆசை அடங்கி விடுவதோ, அல்லது அழிந்துவிடுவதோ இல்லையே!

அன்று நீ என்னைப் பார்த்தாய். அப்போது என் கண்கள் உன் தமக்கையை நோக்கிக் கொண்டிருந்தன. அதற்காக நீ பெருமூச்சு எறிந்தாய். அந்த மன நிலையில் உன்னுடைய தீர்ப்பில் நான் குற்றவாளியாக இருந்தேன். இன்று உன் சகோதரி இருந்த இடம் சூன்யமாக இருக்கிறது. ஆகையால்...ஆம்! ஆகையால் தான்...உன்னைப் பார்க்கிறேன். அந்தச் சூன்யத்தை நிரப்ப உன்னால் தான் முடியும். வேறு யாராலும் முடியாது. நீ இதை அறிவாயா? அறிந்து என் பார்வைக்கு இடமளிப்பாயா? அல்லது பழிவாங்க இது ஏற்ற தருணம் என்று நகைப்பாயா? கிளோரா!

திரையிலே ஓடி முடிந்த படம் சோகத்தை முடிவாகக் கொண்டது. எல்லோரும் எழுந்து நிம்மதியாய் வெளியே வந்தார்கள். திரைக் கதையின் முடிவு அவர்கள் நெஞ்சில் வேலை செய்து கொண்டிருக்கவேண்டும். முடிவற்ற என் கதைக்கு முடிவொன்றும் இல்லாமல் நானும் வெளியே வந்தேன்.

தெருவில் நாங்கள் நடந்துகொண்ட விதத்தை அப்போது தான் நண்பன் விசாரிக்க ஆரம்பித்தான்.

"அவளை உனக்கு ஏற்கனவே தெரியுமா?"

"தெரியும்."

"உறவா, சிநேகமா? இல்லை..."

"ஒன்றும் இல்லை" என நான் வெடுக்கென்று சொல்லி விட்டு நடந்தேன்.

## 3

பள்ளிக்கூடத்தை விட்டு வெளியேறி நாலைந்து வருஷங்களுக்குள் நாலைந்து உத்தியோகங்களுக்குமேல் பார்த்து விட்டேன். ஒன்றிலாவது பிடிப்பு இல்லை. பலபல வேலைகள், பலபல ஊர்கள், பலபல யோசனைகள்; இப்படியே வாழ்க்கை தறிகெட்டு ஓடிக் கொண்டிருந்தது. ஒரே இடத்தில் நான் நிலைத்திருக்க விரும்பியது ஹம்ஸாவின் முகத்தை முதல்முறை பார்த்த பிறகுதான். தினம் ஒரு தடவை அவளைப் பார்க்க முடிந்தால், யுக யுகாந்தரமானாலும் அந்த ஊரிலேயே தங்கிவிடலாம் என நினைத்தேன். கொடுத்து வைக்கவில்லை.

என்னுடைய மூன்றாவது வேலையை ஒப்புக்கொண்ட தினம் அது. அதே தினத்தில் எப்படியோ ஓர் அறை வாடகைக்கும் கிடைத்து விட்டது. அறையின் பெரிய ஜன்னல் தெருப்பக்கம் இருந்தது. ஜன்னலின் வழியே தெரியும் எதிர்வீட்டு வாசலில் பச்சைப் பூஞ்செடிகள். காலையில் படுக்கையை விட்டு எழுந்தவுடன் மனோரம்மியமான காட்சி, மலர்ந்த மலர்களின் மணத்தோடு மனதை மகிழ்விக்கும்.

வாடகைக்குப் பிடித்த அறையை ஓர் ஆளைக் கொண்டு சுத்தம் செய்து கொண்டிருந்தேன். குப்பையைக் கூட்டிச் சேகரித்து அவன் ஜன்னல் வழியாக வெளியே கொட்டினான். உடனே சற்று பலமாகவே தெருப்பக்கத்திலிருந்து கீழ்க்கண்ட சத்தம் கேட்டது:

"தெருவிலே போறவங்களைப் பார்த்துப் போடப்படாதா?—ஹம்ஸா; நில், தலையைத் தட்டி விடுகிறேன். பூவெல்லாம் மண்ணாய்ப் போச்சே!"—இப்படி ஒரு பெண் குரல் எழுந்தது.

பதறிப்போய் வெளியே வந்து பார்த்தேன். வேலையாளும் துடைப்பமும் கையுமாய் மன்னிப்புக் கேட்க வெளியே வந்தான். அவனுடைய சார்பில் நானே பிழையை ஒப்புக்கொண்டேன்.

"பரவாயில்லை" என்றாள் ஹம்ஸா.

அப்படிச் சொல்லும்போது அவளுடைய பற்களில் சில மின்னொளிபோல் வெளியே தெரிந்தன. சிறிய புன்னகை இதழ்களில் அரும்பியது. ஓர் ஓரமாகத் தலையை அசைத்து இந்த வார்த்தையைச் சொன்னாள். இந்த முதற் காட்சியை நினைக்கும்போதெல்லாம் அவள் என்முன் இப்படித் தோன்றுகிறாள்; புன்னகை செய்கிறாள்; ஓர் ஓரமாகத் தலையசைத்து 'பரவாயில்லை' என்று சொல்லி மறைகிறாள்.

கிரிஜாவுக்குத்தான் இதில் கோபம் அதிகம். துடி துடிப்போடு ஹம்ஸாவின் உடம்பெல்லாம் தட்டிவிட்டாள். பிறகு இருவரும் நகர்ந்தனர். பச்சைக் கரைபோட்ட மெல்லிய வெள்ளைப் புடவை; நீல நிற ஜாக்கெட்; தலையில் ஒற்றை ரோஜா. இருவரும் ஒரே சாயல், ஒரே உடை, ஒரே அலங்காரம். பார்த்தவுடனேயே சகோதரிகள் என்று யாரும் எளிதில் சொல்லி விடலாம்.

"பெரிய அம்மா தேவலீங்க; சின்ன அம்மாளுக்குத் தான் கோவம் ஜாஸ்தி! வேணும்னு நான் அவுங்கமேலே போட்டேன்?" என்று முணுமுணுத்தான் வேலையாள்.

மறுபடியும் நான் வெளியே சென்று பார்த்தபோது அவர்கள் தூரத்தில் மறைந்துகொண்டிருந்தனர். அவர்களில் ஒருத்தி முதல் பார்வையில் என் நெஞ்சைக் குலுக்கியவள் — என் அறையின்

தூசியைத் தன்னுடைய கருண்ட கேசத்தின் இடுக்குகளில் ஒளித்துக் கொண்டு சென்றாள்.

## 4

மறுநாள் காலை மிகவும் அழகாகப் புலர்ந்தது. எதிர்வீட்டுப் பசுஞ் செடிகளும், மணமலர்களும் மாத்திரம் அதற்குக் காரணம் அல்ல. உள்ளத்திலே தேங்கி ஊறிக்கொண்டிருந்த அந்த இன்பக் கற்பனைகள்...

ஆபீஸ் நேரம் வந்தவுடன் ஜன்னலுக்கெதிரே அமர்ந்து தலை வாரிக் கொண்டிருந்தேன். கண்ணாடியிலிருந்து கண்கள் வெளியே சென்றபோது, முதல்நாள் மாலை சந்தித்த அந்த இரு பெண்கள் அங்கு மெதுவாக நடந்து கொண்டிருந்தனர். ஒரே அச்சில் வார்த்த இரு ஸ்வர்ண விக்கிரகங்கள்! இருவரும் என் அறையை நோக்கினர்; என் கண்களைச் சந்தித்தனர்; கணப்பொழுது தயங்கிப் பின்பு மேலே ஊர்ந்தனர். இதிலும் ஒற்றுமையா?

நாட்கள் வந்தன; இருந்தன; கழிந்தன. அவர்களும் வந்தனர்; பார்த்தனர்; மகிழ்ந்தனர்; மறைந்தனர். தினந்தினம் காலையில் பள்ளி செல்வதும் மாலையில் வீடு திரும்புவதுமாக அவர்கள் இருந்தார்கள். நான் காலையில் ஆபீஸ் செல்வதும் மாலை நேரங்களில் அறையில் அடைத்துக் கிடப்பதுமாக இருந்தேன்.

முடிவு?—வேண்டாம்; ஆரம்பமே இன்னதென்று தெரியாத போது முடிவு எதற்கு?

ஹம்ஸாவின் வரவுக்காகத்தான் நான் நாள் தவறாமல் நிமிஷங்களை எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால் அவள் மாத்திரம் வரவில்லை. அவளுடன் கிளாராவும் வந்தாள். என் கண்கள், அவர்கள் என் ஜன்னலூடே தெரியும் அந்தக் கண நேரத்தில் ஹம்ஸாவின் மலர் விழிகளைக் காணத்தான் துடித்தன. ஆனால்

## 5

சில மாதங்களில் ஹம்ஸா எனக்கு வெகு சமீபமாக வந்துவிட்டாள். நாங்கள் இருவரும் ஒருவர் மூச்சு மற்றவர் மேல் படும்படியாக அந்தனை அருகில் இருந்தோம். இதில் ஹம்ஸா கெட்டிக்காரிதான். தன்னுடைய தங்கைக்குக் கொஞ்சமும் தெரியாதபடி நடந்து கொண்டிருக்கிறாள். ஏன்! நானும் அப்படித்தான். ஒரு நாள் எங்களுடைய ரகசியம் மணப்பந்தலின் கீழே ஊரறிய முழங்கத்தான் போகிறது. அதுவரையில்? கிளாராவுக்குக்கூட இது தெரியக்கூடாது! இன்னும், அவள் மனசில் உள்ளதும் ஹம்ஸாவுக்குத் தெரிய வேண்டாம்.

ஒரு நாள் இந்தத் தவறு நடந்துவிட்டது: ஹம்ஸாவை என் அறைக்கு அழைத்து ஒரு கடிதம் அனுப்பியிருந்தேன். கடிதத்தில் அவள் பெயர் குறிப்பிடவில்லை. அது கிடைத்த இடமோ...! ஹம்ஸாவுக்காகக் குறிப்பிட்டிருந்த நேரத்தில் சர்வ அலங்காரங்களுடன் கிளாரா என் அறைக்கு வந்தபோதுதான் தெரிந்தது.

“எத்தனை தைரியம் உங்களுக்கு! என்னை இங்கே வரச் சொல்லி உரிமையோடு எழுதியிருக்கிறீர்களே” என்று கேட்டுக்கொண்டே நுழைந்தாள். நான் பிரமித்துப் போனேன்.

ஐந்து நிமிஷங்கள் அறைக்குள்ளே அனற் காற்று வீசியது. நிலைமையை நிதானப்படுத்திக் கொண்டு ஒருவாறு உண்மையைச் சொன்னேன். சொல்லி முடிந்த அந்தக் கடைசி விநாடியில், காதலில் ஏமாற்றமடைந்த ஒரு பெண்ணின் நெஞ்சை என் கண்களால் கண்டேன்; அவள் ஆசை மரம் ஆணிவேரற்று ஓலமிட்டுச் சாயும் சத்தத்தைக் காதுகளால் கேட்டேன். அந்த அறையை விட்டு அவள் வெளியே செல்லும்போது உயிருள்ள ஒரு பெண்ணாக எனக்குத் தோன்றவில்லை. என் உள்ளம் ஒடுங்கியது.

“மன்னியுங்கள்; நமஸ்காரம்!” என்று சொல்லி எழுந்தாள்.

“நமஸ்காரம்!”

## 6

கதையின் ஆரம்பம் முடிந்துவிட்டது. அதன் வளர்ச்சியைப் பற்றிச் சொல்லவேண்டும். ஆனால் என் கதை விசித்திரமானது. ஆரம்பமானவுடன் அதன் முடிவைப் பற்றிச் சொல்லும் துர்ப்பாக்கியம் நேர்ந்து விட்டேன். அதற்கு வளர்ச்சி ஏதேனும் இருந்தால் அது கதையின் முடிவுக்குப் பின்தான் இருக்கவேண்டும்.

ஹம்ஸாவை ஒரு மாதமாக ஊரில் காணவில்லை. பாதிப் பைத்தியம் பிடித்த நிலையில் அவளும் அவள் சகோதரியும் தங்கியிருந்த அறைக்கு நேரில் சென்றேன். அங்கே என்னைக் கண்ணீரோடு வரவேற்றாள் கிளேரா.

“ஹம்ஸா போய்விட்டாள். அம்மை நோய் அவளைத் தின்று விட்டது. அவள் போகும்போது, ‘இனி நான் உயிரோடு இருக்க வேண்டாம். மாறிப்போன இந்த முகத்துடன் அவரைச் சந்திக்க மாட்டேன். நான் சாகிறேன். அவருடைய ஜன்னலுக்காக நான் பின்னிய திரைத்துணி இன்னும் கொஞ்சம் பாக்கியிருக்கிறது. அதையும் போட்டு முடித்து அவரிடம் கொடு. அவருடைய நினைவோடு நான் சந்தோஷமாய்ச் சாகிறேன்’ என்று சொன்னாள்” எனக் கிளேரா கூறினாள். கூறிவிட்டு, “இன்றுதான் நான் துணியைப் போட்டு முடித்தேன். சாயந்தரம் நானே வரலாமென்று இருந்தேன்” என்றாள்.

நான் துணியைப் பெற்றுக்கொண்டேன். அறைக்கு வந்து அதில் கண்ணீர் வடித்தேன். அந்த ஜன்னலுக்கு ஒரு கணம் அதைப் போட்டு அழகு பார்த்தேன். பின்பு பெட்டி படுக்கையோடு, கால் கடுதாசியை ஆபீசுக்கு நீட்டி விட்டு, வழக்கமான நாடோடி வாழ்க்கையைத் தொடங்கினேன்.

## 7

இரண்டு வருஷங்களுக்குப் பிறகு இன்றுமாலை நான் சந்தித்த கிளாரா, எங்கோ விநாடி நேரம் கண்ணில் பட்டு விட்டு, கூட்டத்திற்குள் ஐக்கியமாகிவிட்டாள். ஆனால் அதற்கப்புறம் எனக்கேற்பட்ட அவஸ்தை!

இந்த ஊருக்கு அவள் ஏன் வந்தாள்? அல்லது இங்கேயே தான் வந்துவிட்டாளா? அப்படியானால் இத்தனை பெரிய ஊரில், எந்தத் தெருவில், எந்தச் சிறிய அறையில் அவள் இருக்கிறாளோ! எப்படிக் கண்டு பிடிப்பது? கண்டுபிடித்தாலும் அவளுடைய தற்போதைப் போக்கு...ஹூம்...நாம் நினைப்பதுபோல் அதிசயம் நடந்தாலும் நடக்குமா?

ஒரு நாள் பொழுது எப்படியோ கழிந்தது. மறுதினம் நான் மட்டிலும் முன்பு அவளைக் கண்ட கடைத்தெருவுக்குத் தனியே வந்தேன்; அதே நேரத்தில் அதே இடத்தில் நின்றுகொண்டு கண்களை நாலுபுறமும் தேடவிட்டேன். மனிதர்கள் பரபரப்போடு போனார்கள்; வந்தார்கள்; தங்கள் காரியங்களைக் கவனித்தார்கள். நான் அந்த நடுத்தெருவில் அசையாமல் நின்றேன். கண்கள் யார் யாரையோ கண்டு ஏமாந்தன.

இந்தப் பைத்தியக்கார முயற்சி வீண்போகவில்லை. அதோ அவள் வந்துவிட்டாள்! ஆம், அவள் மட்டிலும் தனியே வந்தாள். சிறிய குடை கையில் தொங்கியது. நாலு புறமும் கூட்டத்தில் கண்களை அலைய விட்டுக் கொண்டு வந்தாள். ஆ! எங்கள் கண்கள் சந்தித்துவிட்டன. ஒரு விநாடி நின்றாள். ஒன்றும் பேசவில்லை. வேகமாக நடந்தாள். நானும் நடந்தேன் அவளுடன்.

தெருக்கள், திருப்பங்கள், குறுகிய பாதைகள் கடந்தன; வரிசையாக இருந்த பல அறைகளில் பூட்டிக்கிடந்த ஒன்றைத் திறந்தாள். வெளியில் நின்ற என்னை அவள் விழிகள் உள்ளே அழைத்தன.

அறையில் அவள் இழுத்துப் போட்ட நாற்காலியில் அமர்ந்தேன்.

“எத்தனை நாளாய் இந்த ஊர்?”

“ஒரு மாசமாய்” என்றாள்.

“என்ன வேலை?”

“உபாத்தியாயினி.”

மத்தியில் அரைமணி நேரத்தை நிசப்தம் விழுங்கிவிட்டது. அதன் மேலும் என்னால் தாங்க முடியவில்லை.

“நான் அன்றைக்குப் போலவே இன்றும் இருக்கிறேன். உன்னிடம் ஒரு விஷயம் கேட்கவேண்டும். உனக்குத் தெரியாததல்ல. நீ விரும்பினால்...........”

“நீங்கள் சொல்லப்போவது தெரிகிறது. நான் அதை விரும்பவில்லை.”

இந்தப் பதிலையும் நான் எதிர்பார்த்துத்தான் வந்தேன். ஆனால் தண்டனையை எதிர்நோக்கி நிற்கும் குற்றவாளிக்கு அது கிடைத்தவுடன்தானே அதன் துன்பம் தெரிகிறது?

“நமஸ்காரம்!” எனக் கை கூப்பிவிட்டு எழுந்தேன்.

வாசற்படியருகில் நான் வரும்போது கிளோரா சூறவளிபோல் பாய்ந்து என் எதிரே நின்றாள். முதல் நாள் தமக்கைக்காகப் பரிந்து கோபத்தோடு தீப்பொறி பறக்கப்பார்த்தாளே, அந்தக் கோபத்தின் ஜ்வாலை இப்போது வீசியது.

“எங்கே போகிறீர்கள்?” எனக் கத்தினாள்.

“எங்கேயாவது.”

"நானும் வருகிறேன் அங்கே!"

"என்னுடனா?"

"ஆம்."

அவள் கரத்தைச் மெதுவாகப் பற்றியபோது குழந்தைபோல் அவள் சிரிக்கிறாள். அவள் மட்டுமா? இரு நதிகள் ஒன்று சேரும் போது அவை இரண்டுமாகவா குமுறுகின்றன? ஆனால் விரைவில் அவை இரண்டும் ஒன்று கலந்து சமநிலையில் ஓட ஆரம்பிக்கின்றன.

அவள் பெட்டியைத் திறந்தேன். ஹம்ஸாவுக்காக நான் கொடுத்த என் புகைப்படம் அங்கே பத்திரமாக இருக்கிறது. அவளை மரணப்படுக்கையில் கூறினாய்: "கிளோரா, அவர் மிகவும் நல்ல வர். எனக்காக நீ அவரை மணம் செய்து கொள்கிறாயா? நான் சொன்னதாகச் சொல். என்னுடைய இறக்கும் கடைசி வேண்டு கோளை அவரிடம் சொல்ல மறக்காதே! வெட்கப் படாதே!" இதைக் கிளோரா இன்றுதான் என்னிடம் கூறினாள்.

ஹம்ஸா! உன் ஆவல் நிறைவேறிவிட்டது.

*தினந்தோறும் நான் சந்திக்கும் அந்தச் சோக எழில் நிரம்பிய முகத்திலிருந்து விதம் விதமான கற்பனைகள் தளிர்விடும். தளதளக்கவைக்கக் காற்றும், அதில் மலர்ந்த மலர்க்கூட்டமும், மலரில் படிந்து விளையாடும் கதிரொளியும் கொடுத்த கற்பனைக் கெல்லாம் சிகரமாக விளங்கியது அவள் முகத்தின் கற்பனை.*

# காணிக்கை

கிராமத்திலும் சேர்க்க முடியாத, நகரம் என்றும் ஒத்துக் கொள்ள முடியாத அந்த ஊருக்கு நான் வந்து சில மாதங்கள் ஆகியிருந்தன. வழக்கம்போலவே அதிகாலையில் எழுந்து அந்தத் தாமரைக் குளத்தங்கரை வழியே உலவச் சென்றேன். இந்த நேரத்தில் தவறாமல் வரும் அதே அமைதிதான் அன்றும் இன்றும் குடி கொண்டிருந்தது. ஆனால் நேற்றுவரை இந்த அமைதி என்னுள் ஓர் இன்பத்தைப் பரப்பி வந்தது. இன்றோ?—இத்திரையின் சோகமும், காலத்தின் மௌனமும், ஆலயத்தின் துயரும் அதனுடன் ஒன்று கலந்து உறைந்து போயிருக்கக் கண்டேன்.

சமீபத்தில் கோயில் கொண்டருளியிருக்கும் பிள்ளையாரைப் பார்த்தேன். அவரும் என்னைப்போலவே இருளில் உட்கார்ந் திருந்தார். நேற்று இந்நேரம் அவருக்குப் பக்கத்தில் ஓர் அகல் விளக்கு சுடர் விட்டுக்கொண்டிருந்தது. அதற்குத்தான் அப்போது எத்தனை பிரகாசம்! 'இதுதான் நம்முடைய கடைசிச் சேவை' என்று உணர்ந்துதான் அந்தமாதிரிப் பொன்னொளியைச் சேர்த்து வைத்துச் சிதறியதோ?

இன்றைக்கு அந்த விளக்கும் கிடையாது; இனிமேலும் அது என்றைக்கும் கிடையாது—அவளைப்போல் ஒரு பக்தை இனிமேல் எப்போது வந்து விநாயகருக்கு அப்படிச் சேவை செய்யப் போகிறாள்?

## 1

ஊரின் மத்தியில் ஒரு பெரிய தாமரைக்குளம். அந்தக் குளத்தில் குளிக்க வேண்டுமென்றால் பொழுது விடியுமுன்பே போய்விட வேண்டும். இல்லாவிடில் பதினோரு மணிக்கப்புறந் தான். அதுவரையில் அக்கிரகாரத்துப் பெண்களின் ஆதிக்கத் திற்கு உட்பட்டது அது.

ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து குளத்தை நோக்கி நடந்தேன். பின்னிருட்டுக்காலம். குளத்தங்கரையில் நின்ற பஞ்சாயத்துப் போர்டு விளக்கு அந்த இருளில் தன் இருப்பிடத்தைத் தெரிவித்துக் கொண்டிருந்தது.

குளத்தில் சலசலப்புச் சத்தம் கேட்டது. இந்த நேரத்தில் நமக்கு முன்பே இங்கு யார் வந்திருக்கிறார்கள்? பார்த்தேன். மங்கலான அந்த வெளிச்சத்தில் இரு உருவங்கள் தெரிந்தன. வயசு அதிகமான கிழவி ஒருத்தி; அவளுக்குத் துணையாக மற் றொரு மத்தியப் பருவமுள்ள பெண்பிள்ளை. கிழவி முன்னமேயே குளித்து விட்டுக் குளத்தின் படிக்கட்டில் உட்கார்ந்திருந்தாள், மற்றவளுடைய ஸ்நானம் அப்போதுதான் ஆகிக்கொண்டிருந்தது.

நான் ஓர் ஓரமாக இறங்கி என் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினேன். என் வரவு அவளுக்கு ஒருவிதப் பரபரப்பைக் கொடுத்திருக்கவேண்டும். அவளுடைய அவசரமான நடவடிக் கைகளால் அது தெரிந்தது. விறுவிறு என்று புடவையைப் பிழிந்து தோளின் மீது போட்டுக்கொண்டு கிழவியைக் கையைப் பிடித்தவாறே பத்திரமாய் அழைத்துக்கொண்டு மேலே சென்றாள்.

குளத்தங்கரைப் பிள்ளையார் கோவிலில் அவர்களுக்கு ஓர் ஐந்து நிமிஷம் கழிந்தது. அதற்குத் தீபம் வைத்து அதை மும் முறை வலம் வந்து, சற்றுநேரம் நின்றபடியே தியானித்துவிட்டுச் சென்றனர்.

மறுநாளும் நான் அங்கு வந்தபோது அதே காட்சிதான். ஆனால் இன்றைக்கு அவர்கள் இருவரின் ஸ்நானமும் முன்பே முடிந்திருந்தது. கிழவி விநாயகர் கோவில் சுவரில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்திருந்தாள். அந்தப் பெண் சுடர்விடும் விளக்கெதிரே நின்று கைகூப்பிக் கொண்டிருந்தாள். இருளில் வந்து கொண்டிருந்த எனக்கு அதிகாலையில் நான் கண்ட அந்தப் புனிதக் காட்சி உடம்பெல்லாம் புல்லரிக்கச் செய்தது. உருக்கி வார்த்து திருத்தப்பட்ட பொற்சிலை போல் உருவம்; பாதித் திறந்தும் திறவாமலும் இருந்த கண்மலர்கள்; சுருண்டு சுருண்டு பெருந்தருவில் படர்ந்து தொங்கும் பூங்கொடி போன்று நெற்றியில் தவழும் கேசம்—இவையெல்லாம் பார்த்த நான் கண நேரம் அப்படியே நின்றுவிட்டேன். ஈரத் தலையிலிருந்து மணிமணியாய் நீர் முத்துக்கள் உதிர்ந்தன. உடலைச் சுற்றியிருந்த ஈரப்புடவை அப்படியே அங்கங்கு ஒட்டிக் கொண்டிருந்தது. இந்த நிலையில் அவள் கண்களிலிருந்து இரு நீர்த்திவலைகள் புறப்பட்டுக் கீழ் நோக்கி யாத்திரை செய்தன.

கண்களை மெல்லத் திறந்தாள். அப்போதுதான் நான் விளக்கு வெளிச்சத்தில் படிக்கட்டுகளில் இறங்கிக் கொண்டிருந்தேன்.

அவர்கள் அந்த இடத்தைவிட்டுப்போன வெகு நேரம்வரை அந்த முகம் என் கண் முன்பே நின்றது. அவளுடைய கண்களில் அந்த நீரைச் சுரப்பித்தது, என்ன துக்கமோ, என்ன துயரமோ, அல்லது என்ன அன்பு வெள்ளப் பெருக்கமோ!

2

பெயர் தெரியாத அந்தப் பெண்மின்னை என் கற்பனையின் சுவையாக்கினேன். தினந்தோறும் நான் சந்திக்கும் அந்தச் சோக எழில் நிரம்பிய முகத்திலிருந்து விதம் விதமான கற்பனைகள் தளிர்

விடும். குளத்தங்கரைக் காற்றும், அதில் மலர்ந்த மலர்க் கூட்டமும், மலரில் படிந்து விளையாடும் கதிரொளியும் கொடுத்த கற்பனைக்கெல்லாம் சிகரமாக விளங்கியது அவள் முகத்தின் கற்பனை. அவளிடத்தே மறைந்து கொண்டிருந்த அந்த சோக சௌந்தர்யத்தைத் தான் நான் எங்கும் கண்டேன்.

ஏதோ ஒரு பெருங்குறை அவளுக்கு; அவளுடைய முகத்தில் அதன் இதழ்த் துடிதுடிப்பில், நெஞ்சின் நெட்டுயிர்ப்பில் தெரிந்தது அது. ஒரு காரணமும் இல்லாமல், எதையுமே எதிர்பாராத ஆத்ம சமர்ப்பணத்திற்காகத்தான் அவள் அந்தத் தெய்வத்துடன் உறவு கொண்டாடுகிறாள் என்று என்னால் நினைக்க முடியவில்லை. புருஷனைப்பற்றியோ, பிள்ளையைப்பற்றியோ, இன்னும் யாரைப் பற்றியோ எண்ணித் தவிக்கும் ஓர் ஏக்கத்தின் பிரதி பிம்பம் அவள்.

ஏனோ சில தினங்களாக அவளைக் குளத்தில் காணமுடிய வில்லை. எதிர்பார்த்து எதிர்பார்த்துப் பழக்கப்பட்ட மனம் அவளது வரவின்மையால் இருளடைய ஆரம்பித்தது.

என்னைப்போல அவளும் வேற்றூரிலிருந்து இங்கு வந்திருக்கலாம். வந்த வேலை முடிந்த பின்பு சொந்த ஊர் திரும்பியிருக்கலாம்.—ஒரு வேளை நானும் இதே நேரத்திற்கு அங்கு வருவது அவளுக்குப் பிடிக்க வில்லையோ! அப்படி ஒன்றும் என் வரையில் அவள் விசேஷமாக எதையும் கண்டிருக்க முடியாதே!

இத்தனையும் நான் நினைத்துக் குழம்பிக்கொண்டிருக்கையில் அவள் மீண்டும் அங்கு வர ஆரம்பித்தாள். மத்தியில் பதினைந்து நாள் இடைவெளி. ஆனால் இந்த இரண்டு வாரங்களுக்குள் அவளிடம் பல பல மாறுதல்கள் தென்பட்டன. முன்போல் இப்போது கிழவியுடன் வருவதில்லை. தனியாகவே வழக்கமாக வந்து கொண்டிருந்த நேரத்திற்குச் சற்றுத் தாமதமாகவே வந்தாள்.

அவனுடைய முகத்தில் ஏற்கனவே குடிகொண்டிருந்த சோகம் இப்போது பன்முறை அதிகமாய்ப் புழுங்கியது. இயந்திரம் போல் தன் வேலைகளைப் பார்த்துக் கொண்டு திரும்பினான்.

## 3

ஒரு வேலையும் இல்லாமல் அந்தக் கிராமத்தில் இருந்தவனுக்கு அந்த ஊர்க்காரர்கள் ஒரு வேலை கொடுத்தார்கள். தேசிய ராணுவ நிவாரணத்திற்காக நிதி திரட்டி, என்னை அந்தப் பொறுப்பேற்கச் செய்தார்கள். எழுத்து வேலையுடன் பேச்சு வேலையும் ஊர் சுற்றும் உத்தியோகமும் கிடைத்தன.

அந்த ஊரிலேயே அன்றைக்கு இரவு பொதுக்கூட்டம், சிறையிலிருந்து திரும்பிய சில ராணுவ வீரர்களை வரவேற்பதற்காக ஏற்பாடாகி இருந்தது. வந்தவரில் ஒருவர் தன் அநுபவங்களைக் கூட்டத்தில் சொல்லிக் கொண்டிருந்தார். தம் நண்பரான சுவாமிநாதன் என்பவர் போர்க்களத்தில் காட்டிய வீரத்தையும், கடைசியில் தேசத்திற்காக வீர மரணம் எய்தியதையும் கூறும்போது எல்லோர் கண்களிலும் நீர் சுரந்தது.

அப்போது பெண்கள் கூடியிருந்த பக்கம் ஒரு பெரும் பரபரப்பு. தொண்டர்கள் ஓடி வந்து பெண் ஒருத்தி மூர்ச்சித்து விழுந்து விட்டதாகத் தெரிவித்தனர். அவசரமாக எழுந்து ஓடினேன். வாழைக் குருத்துப்போல் துவண்டு கிடந்த அவள்தான், அந்தப் பிரஸ்தாப வீரர் சுவாமிநாதனின் மனைவியாம்! விளக்கைக் கொண்டுவந்து முகத்தைப்பார்த்தபோது...ஆ! நெஞ்சு அப்படியே நின்றுவிட்டது.

அதன் பிறகு கூட்டத்தில் நான் என்ன பேசினேனோ, என்ன சொல்லிக் கதறினேனோ தெரியாது. சுய அறிவு வந்த சமயம் என் அறையில் படுக்கையில் கிடந்தேன். கடிகாரத்தின் மணி இரண்டு அடித்தது. அந்த அறை இருளில், தெளிந்துபோன என்

மனத்தில் அன்று மூர்ச்சையாகி விழுந்த பெண் தோன்றினள்.— தினந்தோறும் அதிகாலையில் குளத்தங்கரையில் சந்திக்கிறேனே அதே பெண்!

நான்கு மணியாகு முன்பே துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு, அறையைவிட்டு வெளிக் கிளம்பினேன். வழக்கப்பட்ட கால்கள் குளத்தங்கரைக்கு என்னை இழுத்துச் சென்றன. கண்களில் தூக்கம்! உடலில் சோர்வு, உள்ளத்தில் ஏக்கம்.

பிள்ளையார் கோவிலைப் பார்த்தபோது, என்ன ஆச்சரியம்! இந்த நேரத்தில் அவளைத் தவிர வேறு யார் அங்கு வந்து விளக்கேற்றி வைத்திருக்கப் போகிறார்கள்? என்றுமில்லாதபடி இவ்வளவு முன்பே ஏன் இங்கு வந்து போயிருக்கிறாள்?

அருகில் சென்றேன், பயங்கரமான அமைதியில் அங்குள்ள பலிபீடத்தின் மேல் ஒரு துணி முடிச்சும், அதன் கீழ்க் கடிதம் ஒன்றும் இருந்தன. கடிதத்தைப் பிரித்தேன்.

  

**அன்புள்ள ஐயா,**

*இத்தனை நாள் என் கணவரின் வருகைக்காகக் காத்திருந்தேன். அவர் தாயாரும் இதற்காகத்தான் உயிரை வைத்துக் கொண்டிருந்து, ஏமாற்றத்தால் ஒருமாதம் முன்பு கண்ணைமூடி விட்டார்கள். நேற்றுத்தான் அவர் போன செய்தி தெரியும். இனி எனக்கு வேறு கதி யார்?*

*நான் அதைப்பற்றிக் கவலைப் படவில்லை. கவலைப்பட வேண்டிய காலம் நேற்றோடு கழிந்துவிட்டது. தேச மாதாவுக்காக அவர் உயிர் துறந்தார்; அதற்காக நான் பெருமைப் படுகிறேன்.*

*நான் வேறு அவர் வேறல்ல; எனக்கென்று நான் ஒன்றும் தனியாய் வைத்திருக்கவில்லை. அவர் உயிர் போன அன்றே நானும் இறந்துவிட்டேன்.*

என் போன்றவர்களின் துன்பம் போக்கத் தாங்கள் நிதி திரட்டுவதாகத் தெரிகிறது. இந்தச் சிறு முடிச்சில் இருக்கும் நகைகளையும், பணத்தையும் பெற்றுக்கொள்ளுங்கள்.

தாங்கள் என் கணவருக்காகவும், எனக்காகவும் கூட்டத்தில் ரொம்ப வருந்தியதாகத் தெரிந்தது. உங்கள் அநுதாபம் எங்களுக்கு அவசியம் சாந்தியளிக்கும். நான் பெற்ற சாந்தியோடு தங்களிடம் விடைபெற்றுக் கொள்ளுகிறேன்.

நமஸ்காரம்,

தங்கள் சகோதரி **ராதை**.

ஆகாய விமானம் நிலை கெட்டுத் தலை கீழாக விழும்போது அதன் பிரயாணிக்கு உலகம் எவ்விதம் உருளுமோ அவ்விதம் உருண்டது என் முன். அந்தக் கோவில் தூணில் கிறு கிறுத்துப் போய்ச் சாய்ந்தேன். அதே சமயம் தூரத்தில் குளத்து நீரில் ஏதோ ஒரு சத்தம் கேட்டது.

*காதல்! இதற்கு என்ன அர்த்தம்? இல்லை; இதற்கு வேண்டாம்! அவள் என்னைப் பார்ப்பதற்கும், நான் அவளைப் பார்ப்பதற்கும் இருவரும் விழிகளாலேயே பேசிக் கொள்வதற்கும், ஒருவரின் முன் ஒருவர் சர்வத்தையும் மறந்து விடுவதற்கும் என்ன அர்த்தம்?*

# இளமையில் நடந்தது

**அவன் தன் மனமாகிய டயரியில் ரகசியமாக எழுதுகிறான்:**

நட்சத்திரக் கூட்டத்திற்கு மத்தியில் கம்பீரமாய்ப் பவனி வரும் பூர்ண சந்திரனைத்தான் பெரும்பாலோர் அவளுக்கு உபமானமாய்ச் சொல்வார்கள். எனக்கு இது பிடிக்கவில்லை முழு நிலவின் பொங்கும் பொன்னொளியில் பக்கத்திலுள்ள நட்சத்திரங்களே மறைந்து விடும்போது, அவைகளை ஒரு சுற்றுப் புறமாக்கி எப்படி நிலவை உயர்த்திச் சொல்வது?—நட்சத்திர மங்கையர் புடைசூழ ஒய்யாரமாகப் பவனி வரும் பிறைச்சந்திரன் என்று சொன்னால்தான் அவளுக்குப் பொருத்தமாயிருக்கும். வான வெளியான கருநீலப் படுதாவிலே பிறைச் சந்திரனையும் அதன் தோழிகளையும் பார்த்து ரசித்தவர்கள் இதை அப்படியே ஒப்புக் கொள்வார்கள் — இத்தனையும் குளத்திற்கு நீராடச் சிறுமிகளை அழைத்துக்கொண்டு வந்த அந்தப் பெண்ணைப் பார்த்த பிறகுதான் முடிவுக்கு வந்தேன்.

குளித்துக் கொண்டு நின்ற நான் அவளைப்பார்த்த அளவில் அடுத்தபடி தண்ணீருக்குள் முழுக வேண்டிய நினைவையே விட்டுவிட்டேன். அவள் வந்தாள்; அவள் வருமுன்பே அவளது வருகையைச் கட்டியம் கூறிக்கொண்டு ஒரே சிரிப்பும், கலகலப்பும், குதூகலமும், காற்றில் அடித்தோடி வந்தன.

ஒவ்வொரு படியாய் அவள் மிடுக்குடன் அடி எடுத்து வைத்து இறங்கும் போது எங்களது முதல் பார்வை!...நான் அதிலேயே ஆழ்ந்துவிட்டேன். ஆனால், அவள்? கூத்தும், கும்மாளமும், விழுமழுந்தாள்! நான் இருப்பதைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல், அந்தத் துறையிலேயே இறங்கிக் கொட்டமடிக்கத் தொடங்கினார்கள்.

அவர்களுடைய வம்புக்கு மத்தியில் 'ஒரு சிறுமி' மூன்றும் பேர்வழியாக என்னையும் அவர்களுக்குள்ளே இழுத்தாள்: "வேணுமானா அந்த மாமாவைக் கேளேன்; — ஏன் மாமா! வந்து......"

"முடியாது! உங்கள் மாமா சொல்றதை நான் ஒப்புக் கொள்ள முடியாது!" என்றாள் பிறைச் சந்திரன். மாமாவின் தீர்ப்பு அவளுக்குச் சாதகமாயிருந்தால் கூட ஒப்புக்கொள்ள மாட்டாளாம்!

எனக்குக் கொடுக்கப்பட்ட அந்த நீதிபதிப் பதவியை நான் பிறைச் சந்திரனுக்குச் சாதகமாகவே உபயோகித்துக் கொண்டேன். தீர்ப்பு அவள் பக்கந்தான்.

"கேள், உங்க மாமா சொல்றதை!" என்று சந்தோஷத்தோடு துள்ளினாள் அவள். இரண்டாவது தடவையாக இரு கண்மலர்கள் என்மீது அர்ச்சிக்கப்பட்டன.

"மாமா உனக்குப் பரிஞ்சு பேசறார்; பொல்லாத மாமா!" என்றாள் சிறுமி.

எனக்கு, அந்த வேடிக்கையான, இல்லை. பைத்தியக்காரத்தனமான, எண்ணம் ஏனோ அப்போது தோன்றிற்று.

கைக் கடிகாரம், சங்கிலி, இவற்றை அவள் கண்ணில் படும்படியாகப் படிக்கட்டில் வைத்து விட்டு வீடு திரும்பினேன். வீடு

பக்கத்தில்தான். வேற்றுடை உடுத்திக்கொண்டு, அதைத் தேடப் புறப்படுபவன்போல் அவசரமாக நந்தவனத்தின் வழியாகக் கிளம்பினேன். அவர்கள் திரும்பி வரும் வழியில் நந்தவனம்.

எதிப்பார்த்தபடியே நட்சத்திர மண்டலமும் பிறை மதியும் எதிர்பட்டார்கள்.

"வந்து......அங்கே ரிஸ்ட்வாட்ச்......!"

"நாங்கள் பார்க்கவில்லையே!" என்று துடுக்காகப் பதிலளித்தாள் ஒரு சிறு தாரகை.

சிறு ஏமாற்றம். உண்மையிலேயே கடிகாரம் கெட்டுப் போய் விடக்கூடாதே என்ற பரபரப்போடு நடந்தேன். பின்புறமிருந்து ஒரே கேலிச் சிரிப்பு!

"இந்தாங்கோ, ஞாபகத்தை எங்கே வச்சுட்டு போனேளாம்?" —பிறைச் சந்திரன் கையில் கடிகாரமும் சங்கிலியும் மின்னின.

நான் அவளை ஏமாற்ற நினைத்தேன்; ஏமாந்தே விட்டாள். ஆனால் பழிக்குப் பழி வாங்கிவிட்டாள். என்னையும் ஏமாற்றி விட்டாள்—அதற்கப்புறம் பல நாட்கள், சந்தர்ப்பங்கள், பார்வைகள், பேச்சுக்கள்! என்மட்டில் ஒரே இன்ப வெள்ளம், காட்டாற்றுப் பெருக்கு!

ஃ ஃ ஃ

**அவள் தன் இதய அந்தரங்கத்தில் எழுதுகிருள்:**

ஆமாம், என்னிடமிருந்து அவன் கடிகாரத்தைப் பெற்றுக் கொள்ளும்போது ஏன் அந்தமாதிரிச் சிரித்தான்? குறும்புக்காரன்! கண்களைப் பார்த்தவுடனேயே அவன் பொல்லாத திருடன் என்று தெரிகிறதே. வேண்டுமென்றே கடிகாரத்தைக் குளத்தங் கரையில் போட்டுவிட்டு, என்னை அதைச் சுமக்க வைத்துவிட்டான். இருக்கட்டும் அவனைச் சொல்கிறேன்.

அம்பு காற்றை ஊடுருவிச் செல்வது போலல்லவோ அவன் அன்றைக்குத் தண்ணீருக்குள் சென்றான்! படித்த, அழகான, வாலிபன்; கிராமவாசி. யாரோ மணியகாரப் பிள்ளையாமே; அவருடைய தம்பி மகனும். அவன் இல்லாவிட்டால் இந்தக் கிராமத்தில் நமக்குப் பொழுது போவதேது? ஊர் ரொம்பச் சிறியது. பார்த்தவர்களையேதான் திரும்பத் திரும்பப் பார்க்கவேண்டியிருக்கிறது. இப்படி இருப்பதும் நல்லதுதான். ஆரம்பத்தில் வெறுப்பாய்த்தான் இருந்தது. அந்த இளைஞனுக்குப் பிறகு...? எப்படியாவது இரண்டு மூன்று தடவைகளாவது நம் கண்ணில் பட்டுவிடுகிறானே. என் தம்பி பாலுவுடன் நான் அன்று அலமுப் பாட்டி வீட்டுக்குப் போயிருந்தேன். ஆனால் அவன் அங்கேயிருப்பது எனக்கு எப்படித் தெரியும்? "அம்பி, இங்கே வா" என்று பாலுவைத் தூக்கி முத்தம் கொடுத்துவிட்டு ஏன் அப்படி என்னைப் பார்த்தான்? போதும்! அவனைப் பற்றிக்கூட அடிக்கடி நினைவு வருகிறது. வேறொன்றுமே செய்வதற்கும் நினைப்பதற்கும் புதுமையாயில்லாத இந்த ஊரில் அந்த ஒரு நினைவு தான் என்னிடம் ராஜ்யம் நடத்தப் பார்க்கிறது.

அன்றைக்கு அலமுப் பாட்டியையும் அழைத்துக் கொண்டு நாலைந்து பேராய்ச் சோலைக் கோயிலுக்குப் போனோம். இரண்டு பர்லாங் தூரந்தானே, போய்க் கொஞ்ச நாழி சந்தோஷமாய் இருந்து வரலாமென்று. எங்களைவிட அவனுக்குத்தான் அந்த சந்தோஷம் அதிகம் வேண்டியிருந்தது போலும். தனியாய் உட்கார்ந்து என்ன உல்லாசமாகப் பாடிக்கொண்டிருந்தான்! ஆளைத் தான் முன்பே பார்த்தாகி விட்டதே; ஆனால், அந்தக் குரல்! என்ன உருக்கம், என்ன எடுப்பு.—நாங்கள் வருவதைக் கூடக் கவனியாமல் பாடினான்.

பாவம்! அவன் தனிமையைக் கெடுத்து விட்டோம். வெட்கம் என்ற ஒன்று குறுக்கிடாமல் மனசில் தோன்றுவதையெல்லாம் வெளியே சொல்லலாம் என்றிருந்தால் "நீங்கள்பாட்டிற்குப்

பாடிக் கொண்டிருங்களேன்; ஏன் எழுந்து போகிறீர்கள்?" என்று சொல்லியிருப்பேன். அவன் போயே போய்விட்டான்; வேகமாக, விடுவிடென்று! அந்த மூலையில் போய் இலைப்பறையில் நின்று ஒருதரம் என்னைத் திரும்பிப் பார்த்துவிட்டு மீண்டும் நடந்தான். சற்று நேரத்தில் இரண்டுபுறமும் வளர்ந்து கிடந்த நெல் வயல்களுக்கு மத்தியில் விரைந்து செல்லும் அவன் உடல் மட்டிலும் தெரிந்தது.

நான் கேட்கவேண்டுமென்று விரும்பிய அதே விபரத்தைப் பாட்டியாக அவிழ்த்துவிட்டாள். அவளுக்குத் தெரியாத விபரங்களை என்னோடு வந்திருந்த என் வயசுப் பெண் சீதா கூறினாள்.

அவன் படித்த பிறகு ஒரு வேலைக்கும் போகவில்லையாம். பெயருக்கு அந்த கிராமத்திலேயே பள்ளிக்கூட உபாத்தியாயர் வேலை பார்க்கிறானாம். பள்ளிக்கூடத்தில் குழந்தைகளுக்குப் பாடமேது? கூத்தும், விளையாட்டும், குஷியுமாய்த் தானிருக்கும். ஒரு சில கிறுக்குப் பிடித்த வாலிபர்களைப்போல இவன் பத்திரிகைகளுக்குக் கதை, கட்டுரை எழுதுகிறானாம். அடிக்கடி குழந்தைகளை வைத்துக் கொண்டு நாடகம் போட்டுக் கிராமத்தைக் கூட்டுகிறானாம். பயங்கரச் சமதர்ம வாதியாம். பணக்காரர்களைக் கண்டாலே கொஞ்சங் கூடப் பிடிக்காதாம்! ஊர்க் குடியானவர்களிடம் அவனுக்கு ரொம்ப மதிப்பு உண்டாம்.

போதும்! அந்தச் சமதர்மவாதிக்கு என்னை எப்படிப் பிடித்தது? என் அப்பாதான் பட்டணத்துக் கோடீஸ்வரர் ஸர் ராஜுவையர் என்று தெரிந்தால் என்ன செய்வானாம்? போகிறது; முரட்டுக் கொள்கை உடையவனானாலும் நல்லவன்!

★ ★ ★

**அவன்:**

காதல்! இதற்கு என்ன அர்த்தம்? இல்லை; இதற்கு வேண்டாம்! அவள் என்னைப் பார்ப்பதற்கும், நான் அவளைப் பார்ப்ப

நிறைவேறவில்லை. கடைசியாக மூன்று நாள் வெளியே எங்கும் செல்லாமலே, யார் முகத்திலும் சரியாய் விழிக்காமலே பொழுதை ஓட்டினேன். அவள் மீது பொறுக்க முடியாத கோபம் ஒரு பக்கம்; அவளிடம் ஏற்பட்ட தோல்வியின் வெட்கம் மறுபக்கம்.

நாலாவது நாள் மாலை ஏதோ காரணமாய் அவள் இருந்த தெருப்பக்கம் நடந்தேன். தூரத்தில் நான்வருவது தெரிந்ததும் படீரென்று தலையைத் திருப்பிக் கொண்டு உள்ளே சென்றுவிட்டாள்.

திரும்பும் வழியிலும் அதேமாதிரி வீட்டின் முன்பு அவள் நிற்பது தெரிந்தது. இம்முறை அவள் உள்ளே ஓடவில்லை; நான் வெறுப்போடு வேறு பக்கம் நோக்கியபடி வேகமாக நடந்தேன்.—பாசாங்குக்காரி! கோபங்கொண்டவள் இம்முறையும் உள்ளே ஓடுகிறதுதானே? ஏன் அப்படி நின்று என்னைப் பார்க்க வேண்டும்?

எங்கள் நாடகத்தின் கடைசிக் காட்சி!

அந்தப் பழைய யுத்தகளத்திலேயே, எனக்குத் தோல்வி ஏற்பட்ட அந்த நந்தவனத்தின் ரோஜாச் செடி அருகிலேயே இருவரும் எதிர்பாராத விதமாய்ச் சந்தித்தோம். அவள் திடீரென்று நின்றாள். அகலமான விழிகளால் கண்ணீர் பொங்க என்னைப் பார்த்தாள். சிறிய கசங்கிப்போன காகிதத்துண்டைக் கொடுத்துவிட்டு விடுவிடென்று நடந்தாள்.

கடிதத்தைப் படித்த பின்பு அப்படியே ஓடி அவள் பாதங்களில் அந்த நந்தவனத்து ரோஜா அத்தனையும் பறித்துக் கொட்டி வரலாமோ என்று தோன்றியது. அவள் எழுதியிருந்தாள்:

“நானும் தங்களைக் காதலித்தேன். ஆனால் மறந்து விடுங்கள் இன்று மாலை ஊர் போகிறேன்.”

அந்த மாலை வேளை வந்தது. அவள் அப்பா அனுப்பியிருந்த அழகான பிளஷர் காரில், டிரைவர் கதவைத் திறக்க அவள் உள்ளே சென்று உட்கார்ந்தாள். அந்தக்கார் புறப்படும்போது ஒரு பார்வை...! அதை நான் மறக்கவா!

* * *

நான்: கதாசிரியன் சொல்லுகிறேன்.

ஏழு வருஷங்களுக்குப் பிறகு பட்டாளத்துக்காரர்களை ஏற்றி வந்த ரெயில் வண்டியில் இரண்டாவது வகுப்பில் வெள்ளைச் சிப்பாய்களுக்கு மத்தியில் அவன் உட்கார்ந்திருந்தான். வண்டி ஒரு ஸ்டேஷனில் நின்று, எதிரே வரும் வண்டிக்கு வழிவிடக் காத்திருந்தது. எதிர் வண்டியும் வந்து பக்கத்தில் நின்றது. அகஸ்மாத்தாக அவன் எதிர்ப் பெட்டியை நோக்கினான். முதல் வகுப்புப் பெண்கள் வண்டி. அதில் அவள் மட்டும் ஒரு குழந்தையை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். அரைக் கணத்தில் அவனுடைய கண்கள் அவளை அடையாளம் கண்டு பிடித்து விட்டன.

"நீங்கள்...நீங்களா?..."

"பட்டாளத்திலா சேர்ந்துவிட்டீர்கள்? ஏன்?"

"என்னவோ சேர்ந்தேன்; ஒரு வெறி! நீங்கள் ஊரை விட்டுப் போன மறு நாள் சேர்ந்துவிட்டேன்!"

அவள் பெருமூச்சு விட்டாள்.

வண்டி நகரும்போது "அடே, மாமாவைப் பார்" என்று குழந்தையைக் காட்டிச் செல்லமாய்க் கொஞ்சினாள்.

"மா...மா!" என்றான் மழலையில் குழந்தை.

இருவரும் நமஸ்கரித்துக் கொண்டனர்.

எதிர் வண்டி கண்ணுக்கு மறைந்ததும் அவன் பிராந்திப் பாட்டிலை எடுத்துக் கடகடவென்று உள்ளே விட்டான். மயக்கமாய்ச் சாயும்போது "தயவுசெய்து நான் கண் விழிக்கும்போதெல்லாம் எனக்குக் கொஞ்சம் பிராந்தி கொடுங்கள்; ஊர் போய் இறங்கும் வரையில் எனக்குச் சுய நினைவு வராதபடி பார்த்துக் கொள்ளுங்கள்" என்று சுற்றியிருந்தவர்களிடம் ஆங்கிலத்தில் கேட்டுக்கொண்டான்.

*சுந்தரமும் தேவகியும் வெளி ஒளியில் கலந்தனர். தேவகி வாய் திறந்து தானாகவே அவனிடம் முதலில் பேசினாள். "எனக்குச் சொத்துக் கிடைக்கவில்லை; ஆனால் சுகம் கிடைத்தது...."*

# சொத்தும் சுகமும்

"கொடுக்கிற தெய்வமாயிருந்தால் கூரையைப் பிய்த்துக்கொண்டுதான் கொடுக்கும்போலிருக்கிறது" என்று எண்ணமிட்டவனாய் சுந்தரம் தன் வீட்டின் ஒட்டுத் திண்ணையில் உட்கார்ந்துகொண்டு மேலே கூரையைப் பார்த்தான். கூரை நன்றாய் அகலமாக ஒரு ஆள் உள்ளே நுழையும்படியான அளவுக்குப் பிய்ந்து போயிருந்தது. அந்த வழியாய்த் தான் அந்தக் கொடுக்கிற தெய்வம் வர வேண்டும்; இல்லையேல் அங்கிருந்து கொட்டவேண்டும்!

பிய்ந்துபோன அந்தக் கூரைக்கும், சுந்தரத்தின் பி. எல். படிப்புக்கும் நெருங்கிய உறவு. மாடிவீடாக இருந்ததைக் கூரையாக மாற்றியதுமல்லாமல், அதிலே ஓர் அழகான ஓட்டையும் போட்டுக்கொண்டு நுழைந்தது அந்த அபூர்வப் பட்டம்.

சுந்தரத்தின் தாயும் தகப்பனாரும் உள்ளே சமையல் அறையில், சமீபத்தில் வரவிருக்கும் கல்யாணம் பற்றி மந்திராலோசனையில் இருந்தனர். வெளியே சுந்தரம் ஒரு கொட்டாவி விட்டான், கூரைவழியே தெரிந்த வான வெளியில் அவன் கனவு பறந்தது.

சென்னையில் பெரிய பங்களா ஒன்று சுற்றிலும் பூந்தோட்டம். தோட்டத்தைச் சூழக் காம்பவுண்டுச் சுவர்! அந்தத் தோட்டத்தில் அவனும், அவனுடைய வரப் போகிற மனைவி தேவகியும்

அடிக்கடி சந்திக்கிறார்கள், பேசுகிறார்கள், சிரிக்கிறார்கள், ஓடுகிறார்கள், பிடிக்கிறார்கள். சாயங்காலமானவுடன் பீச்சுக்கு. பிறகு கோவில் குளம், சினிமா இன்னும் எத்தனையோ!

ஆனால், சென்னை வாசம் வருடத்தில் ஒரு மாதத்திற்குத்தான். மற்ற நாளெல்லாம் அங்கே இருக்க அவனுக்குப் பிடிக்காது. பெண் எடுத்த வீட்டிலேயே எப்போதும் யாராவது உட்கார்ந்திருப்பார்களா? அவனுடைய மாமிக்கும் இது தெரியும். அவனது சொந்தக் கிராமத்திலேயே அவனுக்கு வேண்டிய வசதியெல்லாம் செய்து கொடுக்கிறாள். தானும் பெண்ணிடம் ஆறு மாதமும், சென்னையில் ஆறுமாதமுமாக இருக்கிறாள். அவளுக்குத்தான் இவர்களைத் தவிர வேறு பிள்ளைகுட்டிகள் ஏது? அதுமட்டுமா? மாப்பிள்ளையிடம் அவளுக்கு எவ்வளவு மரியாதை, பிரியம், அன்பு! பணச்செருக்குக் கொஞ்சம் கூடக் கிடையாதே! என்ன பெருந்தன்மையாய் நடந்து கொள்கிறாள்!

சுந்தரத்தின் பகற் கனவு அத்தனையும் பொய்யென்று சொல்ல முடியாது. சமீபத்தில் ஏற்பட்ட கல்யாணப்பேச்சின் நம்பிக்கையைக் கொண்டுதான் அவன் அத்தனை மாளிகைகள் எழுப்பியிருக்கிறான்.

அவனே நேரில் பெண்ணைப்போய்ப் பார்த்துவந்தான். அழகுக்குக் குறைவில்லை. அடக்கமும், அன்பும், இளமையும் கொண்ட அவள் விழிகளின் பார்வை அவனை லேசில் விட்டு விடாது. பங்களா, தோட்டம் இந்த ஆடம்பரம் எல்லாம் நூற்றுக்கு நூறு உண்மையேதான். பெண்ணுக்குப் பெற்றோரில்லை. சித்தி ஒருத்தி தான். அத்தனை செல்வமும் அவளுடையதுதான். சித்திக்கும் தேவகியைத் தவிர வேறு யாரும் கிடையாது.

## 2

சுந்தரமும் தேவகியும் ஒருவரை யொருவர் கடற்கரையில் அலைப் பக்கம் தள்ளி விளையாடிக் கொண்டிருக்கும்போது அதா

வரு இந்த மாதிரிக் கற்பனையில் மூழ்கிச் சுந்தரம் ஒட்டுந் திண்ணையில் உட்கார்ந்திருக்கும்போது - "அப்பா தம்பி" என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். எதிரே பிரத்யக்ஷ உலகத்தில் அவன் தாயார் அருகில் நின்றுகொண்டிருந்தாள்.

"என்னம்மா" என்றான் சுந்தரம்.

"நான் ஒன்று சொல்வேன், கோபித்துக்கொள்ளப்படாது".

"சொல்லேன், எப்போது உன்னிடம் கோபித்துக்கொண்டிருக்கிறேன்?"

"உனக்குப் பிடித்த பெண், அத்துடன் சொத்து, சுகம் இந்தனையும் தெய்வம் கொடுக்கப்போகிறது. நீ மஹாராஜனாயிரு. ஆனால் உன்னைப் பெற்றவர்களை மறந்துவிடாதே!"

சுந்தரத்திற்குக் கோபம் வந்துவிட்டது.

"பைத்தியம்! ஏன் உனக்கு இந்தச் சந்தேகம்? நான் என்ன அங்கேயே தங்கிக்கொண்டு உங்களைக் கவனிக்காமலா இருந்துவிடப்போகிறேன்? யார் உனக்கு இதைச் சொல்லிக்கொடுத்தது." என்றான்.

பதில் பேச அவளுக்குத் தைரியம் வரவில்லை. பேசாமல் உள்ளே சென்றுவிட்டாள்.

உண்மையிலேயே ஒரு நல்ல நாளில் சுந்தரத்திற்கும் தேவகிக்கும் சென்னையில் அதே பங்களாவில் சர்வ ஆடம்பரத்துடன் திருமணம் நடந்தது. திருமணம் நடந்த அடுத்த நாளே அந்த இந்தச் சம்பவம் நடந்தது.

"பெண்ணையும் பிள்ளையையும் அழைத்துக்கொண்டு நாளைக்கு ஊர்போகவேண்டும்" என்றாள் சுந்தரத்தின் தாய்.

"பெண்ணையும் அழைத்துக்கொண்டா?" - ஆச்சரியத்தோடு கேட்டாள் தேவகியின் சித்தி.

"ஊரில் எல்லோரும் பார்க்க வேண்டாமா?"

"அக்கரையிருப்பவர்கள் இங்கு வந்து பார்க்கட்டுமே! ஊர் தான் பட்டிக்காடு என்கிறீர்களே!"

சுந்தரத்திற்கு இதைப் பொறுக்க முடியவில்லை.

"பட்டிக்காட்டிலும் மனிதர்கள் இருக்கிறார்கள்" என்றான்.

"இருக்கலாம்; ஆனால் என் பெண் இருக்கமாட்டாள்" என்றாள் மாமி.

அவனுக்கு உடல் முழுதும் பதறியது. தன் கற்பனையின் அருமை மாமி எங்கே? இவள் எங்கே?

"இங்கேதான் எல்லா வசதியும் இருக்கிறதே? உங்களுக்குப் பட்டணம் பிடிக்கவில்லையா?" என்றாள் சுந்தரத்திடம்.

"அதற்காக எப்போதும் இங்கேயே இருப்பதா?"

"இருந்தால் என்ன?"

"என்னைப் பெற்றவர்கள்? என்னைப் படிக்கவைத்து இந் நிலைக்குக் கொண்டுவந்தவர்கள்?"

"அவர்கள் இங்கேயே இருக்கட்டுமே!—நீங்களும் பெயருக்குப் பங்களாவின் முன்னால் 'வக்கீல்' என்று ஒரு போர்டு போட்டுக் கொள்ளுங்கள். வேண்டுமானால் கார் வாங்கித் தருகிறேன். தினம் கோர்ட்டுக்குப் போய் வாருங்களேன்?"

சுந்தரம் நிதானமிழந்துவிட்டான். அவளுக்குப் பணம் கொட்டிக்கிடக்கலாம். அதற்காக மற்றவர்களை அவமதிக்க அவளுக்கு என்ன உரிமை? தானும், தன் படிப்பும், பெற்றோர்களும் அவள் காலடியில் விழ வேண்டுமா!

"புறப்படுங்கள்! இனி ஒரு க்ஷணம் இங்கிருக்க முடியாது" என்று குமுறினான்.

பெட்டி படுக்கைகள், மூட்டை முடிச்சுக்கள் யாவும் முன்னே வந்துவிட்டன. வெறுப்பு நிறைந்த கண்களால் நிர்மானமாய்த் தன் மாளிகையைச் சுற்றி நோக்கினான். இரண்டாவதாக அவன் கண்கள் தேவகி இருந்த அறைப்பக்கம் திரும்பின.

பாதி திறக்கப்பட்ட கதவின் அருகில் அவள் மலர்ந்த மலர்க் கொடியாய் நின்றுகொண்டிருந்தாள். ஆனால் சற்று முன்பிருந்த மலர்ச்சியின் மகிழ்வு இப்போது அக்கொடியிடம் இல்லை. இரண்டு பக்கமும் சுழன்று சுழன்று பற்றும் நெருப்புக்கு மத்தியில் அகப்பட்டு அது கருகிக்கொண்டிருந்தது.

சுந்தரத்தின் பார்வை அக் காட்சியைக் கண்டவுடன் நிலை குத்திவிட்டது. அவள் கண்களினின்றும் புறப்படப் போகும் நீர் மணிகளை அவன் முழுவதும் பார்க்கச் சகிக்காதவனாய் 'விர்' ரென்று திரும்பி நடந்தான். நெஞ்சுமட்டும் கதவருகிலேயே ஊசலாடியது.

சுந்தரத்தின் செருப்புச் சத்தம் பங்களாவின் படிகளில் நட நடவென்று ஒலித்தபோது, அது தேவகியின் இருதயத்தை அழுத்தி எழுப்புவது போலிருந்தது. ஓசை முழுதும் மறையும் மட்டும் அதை உற்றுக் கேட்டுவிட்டுப் பின்பு "அம்மா" என்று கதறிக் கொண்டே சித்தியின் மடியில் போய் விழுந்தாள்.

3

மூன்று வருடங்களுக்கப்புறம் ஒரு நாள். சுந்தரம் அதே திண்ணையில் உட்கார்ந்து அண்ணாந்து பார்த்துக்கொண்டிருந்தான். இப்போதும் அதே கல்யாண நினைவுதான். ஆனால் இந்தக் கல்யாணம் வேறு. இனிமேல் அவனுக்கு நடக்கப்போகிற இரண்டாம் கல்யாணம்!

சுந்தரத்தின் தாயார் இம்முறை அளவுக் கதிகமான விழிப்புடனேயே இருந்தாள். இரண்டாவது சம்பந்தம் வந்தபோது "நாங்கள் பணக்காரவீட்டிலேயே தொடர்புவைத்துக் கொள்வதில்லை" என்றாள். ஆனால் அவர்களோ, "நாங்கள் உங்களை எப்படியும் விடப்போவதில்லை" என்றார்கள். பிள்ளை வீட்டாரின் அத்தனை கோரிக்கைகளுக்கும் அதற்குமேலும் இணங்க அவர்கள் தயாரானார்கள். அப்புறம் என்னசெய்வது?

சுந்தரத்திற்கு இது புதிய நெருக்கடியாக இருந்தது. கதவருகில் நின்று கனிந்துருகிய அப் பெண் முகத்தை இவன் எங்ஙனம் லேசில் மறக்க முடியும்? ஆனால் அதே சமயம் அவளுடைய சித்தி......? அந்த அகங்கார வார்த்தைகள்......?

முதல் இரண்டு வருடங்களில் ஒன்று, இரண்டு, ஒன்பது கடிதங்கள் எழுதிவிட்டான். எப்போது அனுப்ப இசைந்தாலும் தான் வந்து அழைத்துக்கொள்ளத் தயாரென்று குறிப்பிட்டிருந்தான். ஒன்றிற்காவது பதில்வர வேண்டுமே! கடைசியில் மனமுடைந்து அந்த முயற்சியையும் கைவிட்டான்.

நம்பிக்கை முழுவதுமே அற்றுப்போன அந்தத் தருணத்தில் இரண்டரை வருடங்களுக்கப்புறம் அவனுக்கொரு கடிதம் வந்தது.

கடிதமா அது! இல்லை; தேவகியே அதிலிருந்து பேசினாள்.

அவள் எழுதியது

'என் இதய தெய்வமான உங்களுக்கு வணக்கம்.'

தங்கள் கடிதங்களை யெல்லாம் நானும் பார்த்தேன். ஆம், கடிதம் வந்தவுடன் சித்தியுடன் ஒருமுறை அதைப்படிக்கிறேனே, அவ்வளவுதான். அப்புறம் அது எங்கே எங்கே போகுமோ?

தனிமையில் ஒவ்வொரு இரவும் பகலும் நான் ஏங்குகிறேன், அழுகிறேன், தேம்புகிறேன். எல்லாம் சித்திக்குத் தெரியாமல்தான். சித்தி என்மீது உயிரையே வைத்திருக்கிறாள். எப்போதும் என்னருகிலேயே இருக்கிறாள். தன் அன்பாலேயே என்னைக் கொல்கிறாள்: இரண்டு மாறுபட்ட தீவிர அன்புகளுக்கு மத்தியில் அகப்பட்டு நான் துடிக்கிறேன்.

சித்தியிடம் தனக்கென்று ஒன்றுமே இப்போது இல்லை. எல்லாச் சொத்துக்களையும் எனக்காகத்தான் காப்பாற்றுகிறாள். ஆனால் அவளால் என் மனதைத் தெரிந்துகொள்ள முடியவில்லையே!

இந்தக் கடிதம் எழுத எத்தனையோ மாதங்களாக முயன்று இப்போதுதான் சாத்தியமாகிறது. இதற்குப் பதில் எனக்கு நேரே எழுத வேண்டாம். ஒன்று மாத்திரம் உங்களை நான் கேட்டுக்கொள்கிறேன். என்னை என்றைக்கும் மறந்து விடாதீர்கள்.

தங்கள்,

**தேவகி.**

சுந்தரம் பலமுறைகள் படித்துக் கிழிந்துபோயிருந்த அந்தக் கடிதத்தை மீண்டும் படித்தான். படித்துவிட்டுப் பத்திரமாய்ப் பைக்குள் வைத்துக்கொண்டான். நேற்றுத்தான் அவன் தகப்பனார் சென்னைக்குப் 'பையனுக்கு மறுகல்யாணம் நிச்சயித்திருக்கிறது' என்று எழுதினார். இன்னும் இரண்டு தினங்களில் எல்லோரும் தான் குறிப்பிட்ட பெண் வீட்டிற்குப் புறப்படுவதாக இருந்தனர்.

"ஆம் அம்மா, அவர் பெரியவர்தான்."

கதவைத் திறந்துகொண்டு சுந்தரம் ஹாலுக்குள் வந்தான். தேவகிக்குத் தன் கண்களை நம்பமுடியவில்லை, ஓடோடியும் வந்து அவனைக் கட்டிக்கொண்டாள்.

நிதானமான குரலில், சுந்தரம், "நான் தேவகியை அழைத்துப்போக வந்திருக்கிறேன்" என்றான்.

ஓர் விநாடி மௌனம். பின்பு, "நான் அவளை அனுப்ப முடியாது" என்றாள் மாமி.

"தேவகி?"

"வாருங்கள் போவோம்" என்றாள் தேம்பலுக்கு மத்தியில் தேவகி.

"யாரோ ஒருத்தியின் பெண்ணை வளர்த்தேன் அல்லவா? எனக்கு இதுவும் வேண்டும்; இன்னமும் வேண்டும் ஒரு காசுச் சொத்து உனக்குச் சொந்தமில்லை தேவகி" என்று உறுமினாள் மாமி.

மாங்கல்யம் தவிர எல்லா நகைகளும் மேஜைக்கு வந்தன. கண்ணீர் ஆராய்ப் பெருகக் கடைசியில் "உங்களை என் உயிருள்ளவரை மறக்கமாட்டேனம்மா" என்று நடுங்கும் கரங்களால் நமஸ்கரித்தாள்.

சுந்தரமும் தேவகியும் வெளி ஒளியில் கலந்தனர்.

ரெயிலில் சென்று கொண்டிருக்கும்போது, தேவகி வாய் திறந்து தானாகவே அவனிடம் முதலில் பேசினாள்.

"எனக்குச் சொத்துக் கிடைக்கவில்லை; ஆனால் சுகம் கிடைத்தது!"

*"ஆதி மூலப் பொருளுக்குப் பின் எத்தனையோ தத்துவ பரம்பரைகள் வந்தன. அவற்றிற்குமிக மிகப் பின்னே பல தலைமுறைகளுக்கும் பிறகே உலகம் உண்டாயிற்று. ஆனால் மூலப் பொருளுக்கு அடுத்தபடியே மூல சக்தி தோன்றிவிட்டது. ஆதி புருஷனுக்குத் துணைவி முதலில் கிடைத்தாள்."*

# துணைவி

பூவுலகத்திலே தன்னுடைய சிருஷ்டி எழிலின் சிகரமான கயிலையங்கிரியின் உச்சியில்நின்று அவன் வேடிக்கை பார்த்தான் புனிதமான இளமையும் அமைதியான ஒளியும் நிரம்பிய அவன் அழகிய முகத்தில் ஒரு மெல்லிய புன்னகை மல்லிகை தன் இதழ் அவிழ்த்து மணம் பரப்பியது. கருணையும் கனிவும் பொங்கும் கண்ணெழிலால் எதிரே எல்லையற்றுக் கிடக்கும் இயற்கையை விழித்து நோக்கினான்.

வெள்ளிமலையில் அப்போது காலைக் கதிரொளி தங்கப்பொடி தூவிக்கொண்டிருந்தது. பனிப் பாறைகள் லேசாகச் சூடுபெற்று முத்து முத்தாய்த் தங்கள் வேர்வை மணிகளை வழியவிட்டுக் கொண்டிருந்தன. தூரத்தில் தேவதாரு மரங்களின் கூட்டத்திற்கப்பால் கங்கை சலசலவென்று நாணிக்கோணி ஓடிக்கொண்டிருந்தாள். அவளுடைய மெல்லிய பரிசுத்தமான உடலில்தான் அப்போது எத்தனை செளந்தரிய வளைவுகள்! பனிப்பாறைகளுக்கு வெறும் தங்கமுலாம் பூசிய அதே கதிர்க் கலைஞன் ஏன் அவளிடம் மட்டிலும் தனிப் பரிவு காட்டி வானவில்லின் ஏழு நிறங்களையும் அவளுக்கு வழங்கியிருக்கிறான்?

பனிமலையின் உயரத்தை அதிகப்படுத்திக்கொண்டு, அங்கே பகலவன் ஒளியில் கடைந்தெடுத்த சிலைபோல் நின்று கொண்டிருந்த அந்த யுவன் சற்று இதழ் விரிய ஓர் அருட் சிரிப்புச் சிரித்தான். கடல் அலையிலே மேலே துள்ளி உள்ளே பாயும் வாளைமீன்கள் போல் இரு பல் முத்துக்கள் வெளியே தெரிந்து செவ்விதழுக்குள் மறைந்துகொண்டன. அந்தக் காலைப்பொழுது அவனுக்கு மிக மிக இன்பமாக இருந்தது. உரையும் உணர்வும் உருவமும் கடந்த ஒரு பேரின்ப கீதம் அவன் உள்ளத்தில் குபுகுபுவெனப் பொங்கிக் கொண்டிருந்தது. அமைதியான, அழகான கற்பனை கனிந்த காலைப் பொழுது! ஆஹா, இந்த நேரத்தில் உலகம் எப்படி எப்படி எல்லாம் தோற்றமளித்து அவனை மயக்குகிறது!

அவன் படைத்த பனிமலை; அவன் வளரச் செய்த தேவதாருக் கூட்டம்; அவன் பெருக்குவித்த கங்கை அருவி; ஆம், அங்கே கங்கைக் கன்னி சின்னஞ் சிறு அருவியாகத்தான் குதித்தோடிக் குதூகலிக்கிறாள்.

அவை மட்டுமா? காலைக் கதிர்க்கோளம் அவன்கைச் செய்துகொண்ட விளையாட்டுப் பந்து. எல்லையற்ற வான வெளிக்கும் உயரத்திலே அவன் சமைத்திருக்கும் ஒரு நூதன உலகம். ஏன், இந்த மண்ணுலகிலேயேதான் இன்னும் எத்தனை எத்தனை புதுமைகள்! எத்தனை எத்தனை அதிசயங்கள்! அதோ அந்த அடிவானத்தைத் தொட்டுக் கருமை கலந்த பசுமையாய்க் காட்சி காட்டுகின்றதே, அந்தச் சிறிய எல்லைக்குள்ளே அவன் எவ்வளவு ரகசியங்களை ஒளித்து வைத்திருக்கிறான். இதைப்போல இன்னும் கோடிக் கோடி வெளிகள் இந்தப் பூவுலகில் மட்டும்! அவனுடைய வேறு உலகங்களைப் பற்றி நம்மால் நினைத்துப் பார்க்கவும் முடியுமா?

அந்த விளையாட்டுப் பிள்ளை - ஆம், அவனை அப்படித்தான் கூப்பிட வேண்டும்; நல்ல கட்டிளங்காளையான பிறகும் அவனுக்கு

அதே விளையாட்டுப் புத்திதான். வயசு முழுவதுமே ஒரு வேளை அவனுக்கு விளையாட்டுத்தான் போலும்! - தான் செய்த விளையாட்டுச் சாமான்களைப் பார்த்துப் பூரித்துப் போனான். கலைஞன் தனது சிறந்த சிருஷ்டியின் எதிரே மதுவுண்ட வண்டுபோல மயங்கி மயங்கி ரீங்காரம் செய்கிறானல்லவா? இவனும் கலைஞன்தானே! இன்பப் போதையில் ஆழ்ந்து, அதனின்றும் வெளி வர முடியாமல் தத்தளித்தான்.

## 2

சூரியன் மேலே மேலே ஊர்ந்து உச்சிக்கு வந்தான். அவனுடைய ஒளியில் இப்போது வெப்பத்தின் கொடுமை கலந்திருந்தது. பனிக்கட்டிகள் அந்தத் துன்பம் தாங்காது வெகு வேகமாக உருகித் தேகம் இளைத்தன.

சிலையாகக் காலையிலிருந்து நின்றபடியே வேடிக்கைபார்த்தானே அந்த இளைஞனின் மிருதுவான பாதங்களினிடையில் நீர் சலசலத்தது. அதை எற்றி எற்றி விட்டுச் சற்று நேரம் களிப்பெய்தினான். பின்பு அவன் சிறுபிள்ளைச் சேட்டைக்குப் பனிக்குன்றுகள் அகப்பட்டன. ஒன்றோடொன்று மோதவிட்டான். அந்த ஓசையிலும், அணுவசுக்கு நூறுகித் தூள்தூளாய்ச் சிதறும் அழகிலும் அவன் மனம் சிறிது சென்றது. சில விநாடிகளில் ஏனோ அதிலும் சலிப்பு.

'சரி, இந்த மண்ணுலகத்தின் பொழுது போக்கு இன்றைக்குப் போதும். வெயில் அதிகமாகிறது. சற்றே சமுத்திரத்திற்குச் சென்று வருவோம்' என்று எண்ணிக் காற்றில் பாய்ந்து சமுத்திரத்தில் குதித்தான்.

அங்கே:—

அலைகளோடு அலைகளாய் உருண்டு புரண்டது கொஞ்ச நேரம்; உள்ளே அப்பெனப் புகுந்து ஊடுருவிச் சென்றது

கொஞ்ச நேரம்; சமுத்திரத்தின் அடிவயிற்றை எட்டிப் பிடித்து அங்கே நுவிந்திருந்த முத்துச் சிப்பிகளை வாரி இறைத்து விளையாடியது கொஞ்ச நேரம். இப்படியே மத்தியானத்தை மாலைக் காலமாக்கினான்.

கடல்நீர் கறுத்து அவனுக்குப் பொழுதை நினைவூட்டியது. குறும்புத்தனமாய் ஒரு சுறுமீனின் கழுத்தைப் பிடித்து வளைத்துக்கொண்டே மேலே நீந்தி வந்தான். ஆகாயத்தைப் பார்த்த போது அதில் நட்சத்திரம் பூத்திருந்தது. இரவு வந்து எத்தனை நாழிகையாய் அவனுக்குக் காத்திருக்கிறதோ?

இரவில் தங்குவதற்குத் தண்ணீர் வெளி சரியான இடமல்ல. பூமியும் ஏற்றதாக அவனுக்குப் படவில்லை; விண்ணை நோக்கிப் பறந்தான். அங்கே அந்த உன்னதமான நந்தவனத்தில் அப்போதுதான் ஒளிப்பூக்கள் கண்விழித்துப் புனித மணம் வீசும் வேளை. சந்திரப்பூ தன்னுடைய எல்லா மடல்களையும் அவிழ விட்டுப் பூரண சோபையுடன் விளங்கிற்று. அதன் ஒளியால் நட்சத்திர மல்லிகைகளின் மினுக்கும் மிடுக்கும் கொஞ்சமும் குறைந்துவிடவில்லை. 'பூமியிலிருந்து பார்த்தால்தான் எங்கள் ஒளி மங்கிப்போனதுபோல் தோன்றும். இங்கே சந்திர மண்டலத்தில் வந்து எங்கள் தோற்றத்தை ரசியுங்கள். நாங்கள் எண்ணற்ற, தேயாத, வளராத முழுச் சந்திரர்கள்!' எனப் பகட்டிக் கொண்டன.

இரவில் பெரும் பகுதியை அங்கே அலைந்து திரிந்து கழித்தான் இளைஞன். சற்றே தூங்கவும் செய்தான்.

இப்படியே நாட்கள் அவனுக்குப் போய்க்கொண்டிருந்தன. மூவுலகத்திலும் மூன்று வேளைகளையும் மாறி மாறிக் கழித்தான். பல சமயங்களில் ஏதாவதோர் உலகில் தொடர்ந்தாற்போல் இருந்தாலும் இருந்து விடுவான். எப்படித் தோன்றியதோ அப்படி! சித்தம் போக்குத் தானே சிவம் போக்கு?

முடிவற்ற இந்த விளையாட்டில் எத்தனை காலந்தான் அவ னால் ஒரே மாதிரியான இந்த மாறுதல்களைச் சகித்துக்கொண் டிருக்க முடியும்? அலுப்புச் சலிப்பு ஏற்படாதா?

இப்படி முன்பே பல முறை சலிப்புத் தோற்றியதால்தான் நவநவமான சிருஷ்டிகளில் இறங்கினான். கடைசியாக இமயத் தின் உச்சி அவனுக்குப் பூரணதிருப்தி அளித்தது. 'கலையின் வெற்றிக்கு மகுடமிட்டுவிட்டோம். இனி நமக்குச் சலிப்பே தோன்றாது' என நம்பினான். ஆனால் அதுவும் பொய்யாகிவிட் டதே! அப்படியானால் சிருஷ்டியின் அழகுச் சிகரம், தெவிட் டாத பேரின்ப அமுதம், திரும்பத் திரும்பப் புதுமை கொடுக் கும் கற்பகக் கனி அவனால் இன்னும் தோற்றுவிக்கப்பட வில்லையா?

வாலிபனுக்குக் கோபம் பொங்கிக்கொண்டு வந்தது. கோப மென்றால் சாதாரணக் கோபமா? புயல் சீறிச் சமுத்திரத்தைக் கொந்தளிக்கச் செய்தது மலைமலையாக அலைகள் எழுந்து வீரிட்டுக் கதறிமடிந்தன, பூமியில் எங்கும் ஒரே பேரதிர்ச்சி. கானகங்களில் காற்று ஊளையிட்டது. பர்வதங்கள் நிலைபெயர்ந்து கிடுகிடுத்தன. தரை இரண்டாகப் பிளந்து தீக்குழம்பை வெளியே கக்கியது. மேலே மேகத்திரள்கள் யானைக் கூட்டம்போல் ஒன்றோ டொன்று கர்ஜித்து முட்டி மோதின. மின்வெட்டுகள் கண்ணைப் பறிக்க வானம் பயங்கரக் கண்ணீர் வடித்தது.

தான் படைத்த அனைத்தும் தன் சினத்தால் வெம்புவதைக் கண்ட அவன் உடனே தன் கோபத்தைக் கொன்றான். இம யத்தின் குளுமையான அதே உச்சியில் பத்மாசனத்தில் உட் கார்ந்தான். கண்களை மூடி உள்நோக்கினான்.

தன்னையும் உலகையும் சர்வத்தையும் மறந்து தியானத்தில் அமர்ந்த அந்த வசீகர புருஷனின் தேகம் அப்போது அமைதி யான சந்திரபிம்பமாக இருந்தது.

## 3

அவன் அப்படியே உட்கார்ந்திருந்தான். காலை இளங்கதிரொளி, மத்தியான்ன வெயில், மாலை மஞ்சள் தங்கம், இரவில் நிலவும் பாலொளி இப்படியே அவன் மீது மாறி மாறிப் பொழிந்தன. எண்ணற்ற நாட்கள் அவன் அசையவில்லை. அவனுடைய விளையாட்டுப் பொருள்கள் தாமாகவே அவனிடம் விளையாடின. வானம் மழை பொழிந்தது. பனிக்கட்டிகள் அவனை மூடின. கதிரவன் வந்து அவற்றை விலக்கினான்.

எத்தனை எத்தனையோ நாட்கள், மாதங்கள், வருடங்கள்!

கடைசியில் ஒருநாள்—

அவன் நெற்றியிலே, புருவமத்தியினின்று ஆயிரம் கோடிச் சூரியன் உதயமானான். அதே சமயம் அவன் இருதயத்திலிருந்தும் ஆயிரங்கோடிச் சந்திரன் ஒன்று திரண்டு வெளிவந்தது. என்ன இரண்டு ஒளிகளின் பிரவாக ஜோதியிலே அவனைக் காணோமே!

அவன் எங்கே? அல்லது இரண்டிலும் இரண்டறக் கலந்தானோ?

இரண்டு ஒளிப் பிழம்புகள்! ஒன்று அறிவின் தீக்குவியல்; மற்றொன்று அன்பின் கனிந்த ஒளி.

அறிவுக் கனல் தணிந்து ஆண் ஆகியது! அங்கே அவன் நின்றான். அதே பழைய கட்டிளங்காளை; வீரமும் திண்மையும் பூரணப் பொலிவும் முகத்தில் ஜ்வலிக்கச் சுந்தர ரூபனாக நின்றான். அவனுடைய கடைக்கண் பார்வையில் மற்ற ஒளி அழகுத் தெய்வமான பெண்ணமுதமாய், முகத்தில் நாணத்தின் மெல்லிய ரேகைகள் படர நின்றது.

பார்த்துக்கொண்டே நின்றான். தன் அருகே நிற்கும் தன்னுடைய மறுபாதியை, எல்லையற்ற அழகுச் சமுத்திரத்தைப் பார்த்துப் பெருமை அடைந்தான். அவளுடைய எழிலின் தன்மையை எங்ஙனம் விவரிப்பது? சொல்லிற்கும், கற்பனைக்கும், கனவுக்கும் அப்பாற்பட்ட ஒன்று அது. கார்மேகம்போன்ற கருங்கூந்தல் காற்றில் புரள, அவள் அங்கே தலைகுனிந்து நின்றாள். அவளுடைய மென்மலர்ப் பாதத்தில் ஓர் இதழான பெருவிரல் கீழே அர்த்தமற்ற-அர்த்தமுற்றதா!-சிறுகோடு கீறிக்கொண்டிருந்தது.

லேசாகக் கண்ணை உயர்த்தித் தன் சமீபத்தில் நிற்கும் அவனை ஏறிட்டுப் பார்த்தாள். இருவர் உள்ளங்களிலும் மின்னல் பாய்ந்தது.

உலகத்திலே பக்ஷி ஜாலங்கள் ஜோடி ஜோடியாய்க் காதற் கீதம் பாடிப்பறந்தன. மகரந்தத்தைச் சுமந்து வண்டு மலருக்கு மலர் தூது சென்றது. சூரியனை அணைந்து தாமரையும், தன் துணைவியை அணைந்து அன்னப் புள்ளும் சுகம் பெற்றன.

ஆதித் தலைவன் - ஆம், அந்தப் பொல்லாத விளையாட்டுக்கார வாலிபன்தான் - தன் பிரியையோடு இடைய வெளியிலே ஆனந்தக் கூத்தாடினன். அவர்களுக்குச் சந்ததிகளாக நாம் பிறந்தோம்!

●

உஸேஸேன் தன் கடிதத்தில் மிகவும் ஈடுபட்டிருந்தான். அவனுடைய முகபாவங்களையே உற்றுக் கவனித்த ஸரினா "என்ன அண்ணா, ரொம்ப சுவாரஸ்யமான கடிதம் போலிருக்கிறதே! படித்ததையே திரும்பப் படிக்கிறாயா? அல்லது அதில் நிறைய எழுதியிருக்கிறதா?" என்றாள்.

"ஓகோ! யாராவது உன் சிநேகிதன்—சிநேகிதி எழுதியிருக்கிறார்களோ?" என்றாள் சிரித்துக்கொண்டே.

"இல்லை! அந்தக் கவிஞர் எழுதியிருக்கிறார். டெல்லிப் பத்திரிகையில் எழுதுகிறாரே அவர்—மதராஸிலிருந்து எழுதியிருக்கிறார். அவர் பெயர் சுப்பிரமணியமாம்."

"யார்? அந்த 'மின்னலா'? அன்றைக்குக் கடிதம் எழுதினாமே, அவரா?"

"ஆம்" என்று சொல்லிவிட்டுக் கடிதத்தைத் திரும்பவும் உற்சாகமாக ஸரினாவுக்குப் படித்துக் காண்பித்தான்.

உஸேனின் குடும்பத்தில் முக்கியமானவர்கள் மூன்றே பேர் தான். உஸேன், அவன் தங்கை ஸரினா, தாய் கதிஜா. துணைக்கு ஒரு வேலைக்காரியை வைத்துக்கொண்டு அவர்கள் கல்கத்தாவில் குடும்பம் நடத்தினார்கள். படிப்புக்காகச் சொந்தக் கிராமத்தை விட்டு வந்து ஐந்தாறு வருஷங்களுக்கு மேலாகிவிட்டன. விடுமுறைச் சமயங்களில் மட்டும் எல்லோரும் சென்று கிராமத்தில் தங்கி வருவது வழக்கம்.

உஸேனும் ஸரினாவும் ஒரேமாதிரி மனப்போக்குப் படைத்தவர்கள், முற்போக்கு வாதிகள். கவிதை, கட்டுரை, கதை, இதர கலைகள் யாவற்றிலும் அவர்களுக்குத் தனியான ஈடுபாடு உண்டு. உலகப் போக்கை அறிந்து கொள்வதிலும், சிந்திப்பதிலும், விவாதிப்பதிலும் அவர்களுக்குச் சலிப்பில்லாமல் பொழுது போகும்.

"வாழ்க்கை ஓர் அற்புதமான மணமலர்—அதைக் கசக்காது கலைக்கண் கொண்டு காணுங்கள்!"

இந்த மின்னலின் கவிதையை ஸரிஜு தனக்கு எப்போதெல்லாம் அளவு கடந்த சந்தோஷம் பொங்குகிறதோ அப்போதெல்லாம் பாடுவாள். தனிமையிலே அதைப் பாடிக்கொண்டே வாழ்வு பூராவும் இருந்து விடலாமென்று கூட அவளுக்குத் தோன்றும்.

உஸேன் சில சமயம் தன் தங்கை தனிமையில் உல்லாசமாகப் பாடிக் கொண்டிருப்பதைக் கேட்பான். அவன் மனம் பெருமித மடையும். இன்னுஞ் சிறிய வயசில் அவளைச் சூழ்ந்து நிற்கும் இந்த இன்பக் கனவுகள் வாழ்வெல்லாம் அவளை விட்டு அகலக் கூடாது, அல்லா!" என்று பிரார்த்தித்துக் கொள்வான்.

ஒரு நாள் மாலை நடந்த சர்ச்சைகளில் 'மின்ன'லின் கவிதைகள் பற்றியும் பேச்சு நடந்தது. தொடர்ந்தாற்போல் அவைகளைப் படித்துவந்த உஸேன் அதன் ஆசிரியரைத் தாகூரோடும், இக்பாலோடும் ஒப்பிட ஆரம்பித்தான்! அப்போதெல்லாம் இவர்களுக்கும் அந்த 'மின்ன'லுக்கும் பரிச்சயம் எதுவும் கிடையாது.

"அவருடைய சொந்த பாஷை உருதுவோ, ஹிந்தியோ, மராத்தியோ யார் கண்டார்கள்? ஆனால் ஒன்று மட்டும் உண்மை; அவர் வெள்ளைக்காரர் இல்லை. இந்தியாவுக்கே ஏற்பட்ட தனிப்பட்ட பண்பாடும், கம்பீரமும், அழகும் அந்தக் கவிதைகளில் சொட்டுகின்றன" என்றாள்.

"இன்றைக்கே 'மின்ன'லைப் பாராட்டிப் பத்திரிகையின் மேல் விலாசத்தில் கடிதம் எழுதப் போகிறேன் — என்ன சொல்கிறாய்?"

"தாராளமாய்ச் செய்" என்றாள் ஸரினா. உஸேன் அப்போதே எழுத ஆரம்பித்தான். உள்ளத்தில் உதித்த ஆனந்தத்தை யெல்லாம் கொஞ்சங்கூடக் குறைக்காமல் அப்படியே கடிதத்தில் கொட்டியிருந்தான். ஸரினாவிடம் அதைக் காட்டிய போது, "அவருடைய கவிதைக்குப் பக்கத்தில் உன்னுடைய பாராட்டுக் கடிதத்தையும் எந்தப் பத்திரிகையாவது ஒன்றாய்ப் பிரசுரித்தால், ஐரோப்பாக்காரர்கள் அவருக்கு நோபல் பரிசு கூடக் கொடுப் பார்கள்!" என்றாள் கேலியாக. ஆனால் உண்மையில் ஸரினாவுக்கு மட்டும் அந்தப் பரிசு கொடுக்கும் அதிகாரம் இருந்தால் நிச்சயம் அதை முன்பே 'மின்ன'லுக்குக் கொடுத்திருப்பாள்.

பாராட்டுக்கு 'மின்னல்' எழுதிய பதிலே ஒரு சுவை நிரம்பிய கவிதை போன்றிருந்தது. அதன் பிறகு இருபுறமும் பல கடிதங் கள் போய் வந்து கொண்டிருந்தன. சுப்பிரமணியம் உஸேனின் குடும்பத்திற்குக் கடிதங்களின் மூலமே நெருங்கிய உறவினனாகி விட்டான்.

புதிய பிரச்னை யொன்று ஸரினாவின் வாழ்வில் குறுக்கிட்டது ஸரினாவை ஒத்த பருவமுடைய எல்லோர் வாழ்விலும் குறுக்கிடும் பிரச்னைதான். அவளுடைய அண்ணா இது பற்றி நாசூக்காக அவ ளிடம் குறிப்பிட்டான். தாயார் கதிஜா சென்ற இரண்டு வருஷங் களாகவே இதைச் சொல்லிச் சொல்லி அலுத்து விட்டாள். அப் போதெல்லாம் இவ்விஷயம் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த தாக ஸரினாவுக்குத் தோன்றவில்லை. தன் தமையன் உஸேன் இதில் தலையிட ஆரம்பித்தவுடன்தான் அவள் மன அமைதி கலைய ஆரம்பித்தது.

"உனக்கு இந்த வருஷம் பரீக்ஷை முடிந்த பிறகாவது நிக் காஹ் செய்யவேண்டுமென்று அம்மா என்னைத் தொந்தரவு செய் கிறார்களே!" என்றான் உஸேன்.

"உனக்கும் அம்மாவுக்கும் நான் உங்களோடு இருப்பது பிடிக்கவில்லையா?" என்று சிரித்துக்கொண்டே கேட்டாள் ஸரினா.

"தாராளமாய் எப்போதும் இரேன். உனக்குப் பிடித்த ஒருவனைக் கலியாணம் செய்துகொண்டு இரண்டு பேரும் ஹாய்யாக இங்கேயே இருங்களேன்!"

"முதலில் எனக்கு அண்ணி வேண்டும்! அப்புறம் தான் என்னைப்பற்றிய விஷயம். அம்மா உன்னைப் பற்றி ஒன்றுமே சொல்லாமல் என் கலியாணத்தில் மட்டும் ஏன் இத்தனை அக்கறை காட்டுகிறார்கள்?" என்றாள்.

"எது முறையோ அதைத்தான் செய்கிறார்கள்."

"சரி, பரீக்ஷை முதலில் முடியட்டும், அப்புறம் உங்கள் இஷ்டப்படி நடக்கச் சித்தமாயிருக்கிறேன்" என்றாள் ஸரினா.

"எதிலும் உன் இஷ்டந்தான் ஸரினா! நான் ஒன்றிலும் ஒருக்காலும் குறுக்கிட மாட்டேன். அம்மாவிடமும் அப்படியே சொல்லியிருக்கிறேன்"

ஸரினா அன்றிரவு படுக்கையில் இதைப்பற்றிச் சிந்தித்தபடியே புரண்டாள். அவளுடைய தாயார் ஸரினாவுக்கென்று தேர்ந்தெடுத்து வைத்திருக்கும் வரனை அவளுக்குத் தெரியும். ஆனால் தஹிரா இதை ஸரினாவிடம் வற்புறுத்தவில்லை; வற்புறுத்தவும் மாட்டாள். ஏதோ தனக்குப் பிடித்த ஒருவனுடன் ஸரினா சந்தோஷமாய்க் குடும்பம் நடத்தினால் போதுமென்றிருந்தது அவளுக்கு.

ஸரினாவும் தன் தாயார் மனசிலுள்ள வரன் ரசூலைப் பற்றி எண்ணமிட்டாள். ரசூல் உஸேனின் வகுப்பில்தான் படிக்கிறான். ஆள் வாட்ட சாட்டமாய்க் கவர்ச்சியான தோற்றமுடையவன். வருடா வருடப் பள்ளிக்கூடத்து விளையாட்டுப் பந்தயங்களில்

அவன்தான் முதல். அடிக்கடி இந்த வீட்டிற்கு வந்து போய்க் கொண்டிருந்தான். அவன் வரவால் அனைவருக்கும் சந்தோஷந் தான். ஆனால் ஏனோ ஸரீனாவிற்கு மட்டும் அவன் தாயார் ரசூலி டம் அலாதிப் பிரியத்துடன் நடந்து கொள்வதைக் காண ஆச்சரிய மாயிருந்தது. வரப்போகிற மாப்பிள்ளை என்ற ஆசையாலோ!

கடைசியாகத் தூக்கம் வந்து ஸரீனாவின் இமைகளை மெல்ல வருடியபோது "எனக்குப் பிடித்த சாரம் என்னுடைய லட்சியத் திற்கொத்த ஒருவனைத் துணைவனாகக் கொள்வேன். அவன் ரசூலாக இருந்தாலும் பரவாயில்லை!" என்ற முடிவுடன் கண்களை மூடிக்கொண்டாள்.

கல்கத்தாவின் சரித்திரத்தில் அன்று துயரம் நிறைந்த தினம். சரித்திர ஆசிரியன் தன்னுடைய இரத்தக் கண்ணீரால் குறிப்பிட வேண்டிய நாள். நேரடி நடவடிக்கை நாள்...

சூரியன் பெரிய பெரிய மாடிகளுக்குப் பின்னே தன்னை மறைத்துக்கொண்டு மேற்கே சரிந்துவிழுந்தான். ஊர் முழுவதும் ஒரே ரணகளமாகக் காட்சி கொடுத்தது. எங்கும் கூக்குரல், சாவின் கடைசி ஓலம், "விடாதே, பிடி" என்னும் வெறியாட்டம், குழந்தைகளின் அழுகை, முதியோரின் ஒப்பாரி, இன்னும் என் னென்னவோ பேய்க் கூச்சல்கள்! பிரம்மாண்டமான கட்டிடங் களைப் பற்றிக் கொண்டு செந்தீ, தன் கொடிய நாக்குகளை நாலா புறமும் வீசி இரை தேடியது. தெருவெல்லாம் பிணக்காடு; சாக் கடையெல்லாம் இரத்தப் பெருக்கு; அங்கங்கே குவியல் குவிய லாய்ச் சிதைக்கப்பட்ட சதைகள். குண்டுச் சத்தம் படபடத்தது. ஈட்டியும், வேலும், வாளும் ஒன்றோடொன்று மோதின. நேற்று வரை தோளோடு தோள் சேர்த்து நடந்த ஹிந்துவும் முஸ்லிமும் இன்று ஒருவனை ஒருவன் ஜன்மப் பகைவனாகக் கருதினான். கல்கத்தா நகரத்தின் மேலே வட்டமிட்டுச் சுற்றிய கழுகுக் கூட்டம் அன்று வித்தியாச மில்லாமல் இரு வகுப்பாரின் சதையையும் ருசி பார்த்துக் கும்மாளமிட்டது.

அன்றைக்கு வந்த முஸ்லிமுக்கு எமன், முஸ்லிம் வந்தது ஹிந்துக்குச் சாவு நேர்வதை. இவர்களுக்கு மத்தியிலகப்பட்ட வியாபாரிகள்—ஆ! குடியழிந்தவர்கள், உயிரைப் பதுக்கியவர்கள், தப்ப வழி தேடியவர்கள், எதிர்ப்புக்குச் சக்தி திரட்டியவர்கள், எத்தனை எத்தனையோ? இருந்தாலும் என்ன? இவர்களும் தப்பவில்லையே!

ஸரினா துன்பமே உருவெடுத்தாற்போல் தன் வீட்டிற்குள் தனியே இருந்தாள். அவளைத் தவிர அங்கே யாருமில்லை. காலையில் வேலைக்காரியை அழைத்துக் கொண்டு வெளியே சென்ற தாயார் இன்னும் வீடு திரும்பவில்லை. சாயங்காலம் வரை பொறுத்துப் பார்த்து விட்டு அவன் அன்னையைத் தேடிக் கிளம்பி விட்டான்.

“இந்தச் சமயத்தில் நீயும் போகாதே அண்ணா!” எனக் கூவினாள் ஸரினா.

“உனக்குப் பயமாயிருக்கிறதா? அப்படியானால் இருக்கிறேன்” என்றான் உஸேன்.

“எனக்குப் பயமில்லை; நீ வெளியில் போவதுதான் பயமாயிருக்கிறது!”

“சீக்கிரம் வந்து விடுகிறேன். கதவைத் தாழிட்டு மூன்றும் மாடியின் மேல் இரு” என்று கூறிக் கிளம்பிவிட்டான். பெற்ற வயிற்றின் பாசம் அவனைச் சாவுக்கஞ்சாது இழுத்தது.

இரவிலே தெரு விளக்குகள் எரியவில்லை. ஒரே இருள். ஆனால் இந்த இருளைக் கிழிக்க அங்கங்கே தீப் பற்றி எரிந்த வீடுகள் உதவிக் கொண்டிருந்தன. நரகலோகம் என ஒன்று இருக்கிறதென்றால் அது இப்படித்தான் இருக்குமோ என எண்ணி நடுங்கிக் கொண்டிருந்தாள் ஸரினா. ஒவ்வொரு கணமும் ஸரினாவின் நெஞ்சில் ஒவ்வொரு பாறைக்கல்லைப் புரட்டித் தள்ளிவிட்டுக் கழிந்தது.

ஒரே துடிதுடிப்பு; பரபரப்பு; கவலை; இன்னும் காணோமே! இன்னும் காணோமே! இன்னும் காணோமே!

ஜன்னல் வழியாகக் கறுப்புத் துணியை எடுத்துத் தலையை மூடிக்கொண்டு கீழே தெருவில் பார்த்தாள். தூரத்தில் நாலைந்து குண்டர்கள் சேர்ந்து யாரையோ துரத்தி வரும் சத்தம் கேட்டது. தெளிவில்லாத முறையில் அவர்களுடைய உருவங்களும் தெரிந்தன. அவர்கள் முஸ்லிம்கள்தாம் என அறிந்துகொண்டாள். இந்தக் கூட்டத்தில் உசேன் இருக்கக்கூடாதா? இருந்து "அம்மா சுகம்" என்ற ஒரு வார்த்தையை ஸரிணுவுக்குச் சொல்லக் கூடாதா?

ஒற்றை மனிதன் தள்ளாடித் தடுமாறி அந்தக் கூட்டத்திற்குப் பயந்து முன்னால் ஓடிவந்தான். ஒருதரம் அவன் 'ரோட்'டில் விழுந்து மறுபடியும் எழுந்து வந்ததை ஸரிணு கவனித்தாள். அவனைத் தடுக்கியது ஏதாவது பிணமாகத்தான் இருக்கவேண்டும். "ஐயோ, பாவம்!" எனப் பெருமூச்சு விட்டாள் ஸரிணு. அவள் அண்ணன் உசேனையும் இப்படி யாராவது துரத்தினால்...? ஸரிணுவின் உள்ளத்தை யாரோ கசக்கிப் பிழிவது போலிருந்தது.

சோதனைதான்!

வந்த மனிதன் "உதவி! உதவி!" என அரைகுறை ஹிந்தியில் கதறிக்கொண்டே ஸரிணுவின் வீட்டுக் கதவில் சாய்ந்தான். ஒரு கணம் ஸ்தம்பித்து நின்று யோசித்தாள். அவள் கால்கள் படபடவென்று மாடிப் படிகளில் உதைத்துப் பறந்து தாவின. கதவைப் படீரெனத் திறந்து அந்த மனிதனை உள்ளே இழுத்துக்கொண்டு வந்து ஒரு மூலையில் தள்ளினாள். மறுபடியும் கதவு அதே வேகத்துடன் சாத்தப்பட்டது. ஆனால் அதைத் தாழிட முயல்வதற்குள் குண்டர்கள் கூட்டம் வெளியேயிருந்து கதவைத் தள்ளியது.

"எங்கே அவன்?" என்று உறுமினார்கள் வந்தவர்கள்.

"யார்?" என்று பதிலுக்குக் கத்தினாள் ஸரினா.

"இப்போது இங்கே வந்தானே அவன்?"

"ஒருவனும் வரவில்லையே!"

"இல்லை!—வந்தான்!" என்று அதட்டியபடியே கூட்டத்தின் முன்னே வந்து நின்றான் ஒரு வாலிபன். ஸரினா அவனை உற்றுப் பார்த்தாள். அவன் ரசூல்! அவளுக்குக் கணவனாக அவனைக் காண அவள் தாயார் எதிர்பார்க்கும் மாப்பிள்ளை!

"உனக்கு இந்தக் கூட்டத்தில் சேர வெட்கமில்லை?" என்றாள் ஸரினா.

"வெட்கம்! பழிக்குப் பழி! ரத்தத்திற்கு ரத்தம்! எங்கே வந்தவன்?"

"இவனா வெட்டினான்?"

"பதிகளத்தில் இதையெல்லாம் பார்க்க முடியாது! அவனைக் கொண்டுவந்து வெளியே தள்ளு!"

"அவன் இங்கு இல்லை!"

"பொய் சொல்கிறாய்" எனச் சீறினான் ரசூல்.

"இருக்கிறானென்றே வைத்துக்கொள். அவனை விட முடியாது! இந்தா என்னை வெட்டிவிட்டு இந்த வீட்டிற்குள் நுழை."

ரசூல் மௌனமாக அந்த கூட்டத்தைத் திருப்பிக் கொண்டு சென்றான். அவர்களது கோஷம் தூரத்து இருளில் உற்சாகமில்லாமல் ஒலித்தது.

தாயாரின் நினைவும் தகப்பனின் நிலையும் இதயத்தை அழுத்த, ஸரினா கண்களில் கண்ணீரோடு தன்னிடம் வந்த அகதியைப் போய்ப் பார்த்தாள். அவன் இளைஞன். முகத்தில் பயமறந்

திருந்தது. இன்னும் பயம் அவனைவிட்டு அகலவில்லை. ஒரு கதர் ஜிப்பாவும் இடுப்பில் வேஷ்டியும் கட்டியிருந்தான். வழியில் புரண்டதால் உடையெல்லாம் இரத்தம் தோய்ந்திருந்தது. மேலெல்லாம் இரத்தம், நாற்றம், "நன்றி" என்று ஸரிஜாவுக்குக் கை கூப்பினன்.

"குளிக்கிறீர்களா? இதோ குழாய் இருக்கிறது; போய்க் குளியுங்கள். வேற்றுடை தருகிறேன்" என்று குழாயைக் காண்பித்து உஸேனின் உடைகளில் வேண்டியவற்றை எடுத்துப் போட்டாள். வந்தவனுக்கு இத்தனையும் கனவில் நடப்பது போலிருந்தது. தான் ஒரு முறை இறந்து போய், தனது ஆவிதான் மறு உலகில் இப்படிச் சுகம் பெறுகிறதா எனச் சந்தேகித்தான்.

அவன் குளித்து வருமட்டும் ஸரிஜா ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக்கொண்டே தேம்பினாள். தேம்பல் அழுகையாக மாறிவிட்டது. பிரளய காலத்து உணர்ச்சியில் அவளது மிருதுவான உள்ளம் கட்டுக் கடங்காமல் இங்குமங்கும் புரண்டு அலறியது.

அகதி வேற்றுடை உடுத்து அதே மூலையில் நின்றான். அவனுக்கு ஸரிஜா தேம்புவது புதிராக இருந்தது; இவள் ஏன் அழுகிறாள்? முன்பின் தெரியாத ஒருவனைக் காப்பாற்ற அதிசயமான தீரத்தைக் காண்பித்தாளே? இவளுக்கென்ன குறை இப்போது?

"ஏன் அழுகிறீர்கள்?" — பச்சாத்தாபத்தோடு அவளை ஆங்கிலத்தில் விசாரித்தான்.

அவனுடைய ஆங்கிலத்தை அவள் அப்போது வெறுக்கவில்லை. அவனுடைய உடையைக் கண்டவுடனேயே அவன் தென்னாட்டுக்காரன் எனத் தீர்மானித்து விட்டாள்.

"உஸேனுக்கு நான் எவ்வளவோ சொல்லியும் அவன் கேட்க வில்லை. பிடிவாதமாக என்னை விட்டுப் போய்விட்டான். அவனைப் போல ஒரு அண்ணா...ஐயோ, அண்ணா! அம்மா!" என மீண்டும் தேம்பினாள்.

"உஸேன்?...யார், உஸேனா! வக்கீலுக்குப் படிக்கிறாரே அவரா?" என்று உஸேனின் முழு விலாசமும் சொல்லி, "அவர் என் நண்பராச்சே" என்றான்.

"உங்கள் பெயர்?"

"சுப்பிரமணியம்!—பத்திரிகைக்கு எழுதுகிறவன்!"

"ஆ! கவிஞர் சுப்பிரமணியமா!—இந்தப் பொல்லாத வேளையிலா உங்களைச் சந்திக்கவேண்டும்!" — நமஸ்கரித்து ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டாள். இருவரும் உஸேனுக்காகவும் கதிஜாவுக்காகவும் துடி துடித்தனர்.

இப்படியே ஒவ்வொரு விநாடியும் பல யுகாந்தரங்களாகக் கழிந்தது.

"ஸரினா!...ஸரினா!"

உஸேனின் சத்தந்தான். ஆனால் ஏன் இப்படி ஒலிக்கிறது?

ஓடிச்சென்று கதவைத் திறந்தாள் ஸரினா. கதவில் சாய்ந்து நின்ற உஸேன் மார்பில் வைத்த கரத்தை எடுக்காமல் அப்படியே தரையில் சாய்ந்தான். மார்பிலிருந்து இரத்தம் பெருகிக்கொண்டு வழிந்தது. நெஞ்சிலே கத்தி வீச்சு!

"ஹா! உஸேன்!"—சுப்பிரமணியம் ஓடிவந்து அவன் தலையை மடிமீது எடுத்து வைத்துக்கொண்டான். உஸேன் சுப்பிரமணியத்தை முன்பு நேரில் பார்த்ததில்லை. பயங்கரமான ஆச்சரியத்தோடு, "நீ யார்?" என்று கேட்பதுபோல் பார்த்தான்.

ஸரினா உதவிக்கு வந்தாள். "அவர்தான் கவி சுப்பிரமணியம்! காலிகளிடம் தப்பி ஓடிவந்தார். புகலிடம் கொடுத்தேன். விசாரித்த பிறகுதான் தெரிந்தது" என்றாள். ஆனால் இதைச் சொல்வதற்குள் அவள் உஸேனின் நிலையைப் பார்த்துவிட்டுப் பட்டபாடு...!

சற்றே உஸேனின் முகம் மலர்ந்தது. ஆனால் அணையப் போகும் விளக்கின் மலர்ச்சி அது. "அம்மா போய்விட்டார்கள். இதோ...நானும்...போகிறேன்...; சுப்பிரமணியம்! ஸரினாவைக் காப்பாற்றுங்கள்...ஸரினா!...ஸரினா!"

உஸேன் ஸரினாவைப் பார்த்துச் சிரிக்க முயன்றபடியே கண்களை மூடினான்...

தமிழ்நாட்டின் எல்லைக்குள் ரெயில் ஓடிக்கொண்டிருந்தது. முதல் வகுப்பில் சுப்பிரமணியம் அளவுக்கு மீறிய களைப்பால் தூங்கிக்கொண்டிருந்தான். இரண்டு மூன்று தினங்களாக அவன் பட்ட வேதனைகள் — அப்பாடா! உடம்பின் ஒவ்வொரு அணுவும் ஓய்வுக்காகக் கெஞ்சியது. அதனால் தூக்கத்தில் தன்னை மறந்து விட்டான். என்றாலும் கடந்த நாட்களில் நடந்த சம்பவங்கள் கனவு லோகத்திலும் வந்து அவனை மிரட்டிக் கொண்டிருந்தன.

உஸேன் வந்து விழுந்து அன்று உயிரை விட்டானல்லவா? அவன் உயிர் போய் அரைமணி நேரத்திற்கெல்லாம் ஒரு கொள்ளைக்கூட்டம் உஸேன் வீட்டைத் தாக்கியது. கதவுகள் படபடத்தன. நெருப்புப் பந்தங்கள் உள்ளே விழுந்தன. "வெளியே வருகிறீர்களா? கூட்டோடு கைலாசம் போகிறீர்களா?" என்ற எக்காளம் கிளம்பியது. யோசிக்க நேரமில்லை. சுப்பிரமணியம் அங்கு கிடந்த பல சேலைகளை ஒன்றோடொன்று முடிந்தான். மாடியின் பின்புறத்து ஜன்னலில் இறுகக் கட்டி, இருள் சூழ்ந்த பக்கத்துச் சந்தில் முதலில் ஸரினாவை இறக்கினான். பின்பு தானும் கிடந்த சில துணிகளை எடுத்துக் கொண்டு பின்னால் இறங்கினான்.

இரவிலே சுவரோடு சுவராய் இருவரும் பதுங்கினார்கள். மரத்தோடு மரமாய் நின்றார்கள். பிணங்களோடு பிணங்களாய்க் கிடந்தார்கள். தரையிலே உருண்டு உருண்டு கொஞ்சப் பகுதியைக் கடந்தார்கள். இந்தச் சமயத்திலே அவர்கள் வீடு நெருப்புக் கொடி பறக்கவிட்டுப் பிறகு குட்டிச்சுவராய் நின்றது.

இரவு கழிந்து பகல் வந்தது. ஒவ்வொரு வினாடியும் ஆபத்து! ஒவ்வொரு வினாடியும் எமவேதனை!

"அவர் மட்டிலும் தனியாக இருந்தால் சுலபமாகத் தப்பிக் கொள்வாரே; என்னாலல்லவோ இத்தனை துயரம்" என்று கண்ணீர் வடிப்பாள் ஸரினா. ஒவ்வொரு சமயம் "என்னைக் கவனிக்காதீர்கள்; நீங்கள் முதலில் தப்ப வழி பாருங்கள்" என்பாள் வேதனையுடன். சுப்பிரமணியம் மௌனமாகச் சிரிப்பான். "உங்களுக்காக ஆயிரந்தடவை நான் சிரித்துக்கொண்டே உயிரை விடுவேன்; தயவு செய்து இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் மட்டும் நான் சொல்வதைக் கேளுங்கள்" என வேண்டிக்கொள்வான். அந்தத் துன்பத்திலே அவனுக்கு இன்பம் இருந்தது. நியர்கத்திலேற்படும் இன்பம்!

பொழுது பலபலவென்று விடிந்தது. காக்கைக் கூட்டம் வானத்தில் படர்வதை வெயிலில் இருந்தவாறே வேடிக்கை பார்த்தாள் ஸரினா. சுப்பிரமணியம் அயர்ந்து தூங்கினான். அவனைப் பார்த்தவாறே, "மற்றவர்களுக்காகச் சாவது என்பது சுலபம். உயிரை வைத்துக் கொண்டே மற்றவருக்காக உழைத்துத் தேய்வது சிரமம்" என மெதுவாகச் சொல்லிக் கொண்டாள் ஸரினா.

இளஞ் சூரியனின் கிரணங்கள் முதலில் சோகத்தின் உருவான ஸரினாவின் மதிமுகத்தில் படிந்து, பின்பு, அவள் உடல் முழுதும் தவழ்ந்தன. தலையைச் சுற்றியிருந்த மெல்லிய மஞ்சள் பட்டு அப்போது தங்கத் துணியாகியது. இடுப்பின் கருநீலப்

பூந்துகிலோ எண்ணற்ற வர்ணங்களை உமிழ்ந்தது. அழகுத் தெய்வம் அங்கே கண்ணீர் உகுத்து உட்கார்ந்திருந்தாள்.

சுப்பிரமணியத்தின் மேலும் கதிர் ஒளிபடவே, அவன் கண் விழித்தான். அவனுடைய முதற் பார்வை ஸரினாவின் பக்கம் சென்றது. அவள் எங்கோ ஜன்னல் பக்கம் திரும்பி மேகத்திலும் வானத்திலும் தன் அண்ணனையும் தாயாரையும் தேடிக்கொண்டிருந்தாள்.

"ஸரினா!" என்றான் சுப்பிரமணியம்.

ஸரினா திடுக்கிட்டாள். கண்ணீரைத் துடைத்துக் கொண்டு புன்சிரிப்போடு அவனை நோக்கினாள்.

"துன்பத்தின் போக்கு ஒரு தனிப்பட்டது. முடியுமானால் அவ்வளவையும் தங்களிடமிருந்து நான் பகிர்ந்து கொள்வேன். தங்கள் கண்ணீர் என் நெஞ்சைக் கலக்குகிறது. கொஞ்சம் சந்தோஷமாயிருங்கள். எங்கள் நாட்டில் எப்போதும் இந்தத் தொல்லை கிடையாது. இங்கே உங்கள் வழி எதுவோ அதை நீங்கள் விருப்பப்படி வகுத்துக் கொள்ளலாம்."

கடைசி வாக்கியத்தைச் சொல்லும்போது சுப்பிரமணியம் அடக்கமுடியாத கலக்கத்துடன் கூறினான். அவள் அதைக் கேட்கும்போது அதே உணர்ச்சிதான் அவளையும் ஆட்டியது.

எதையோ ஆழமாக, வெகு ஆழமாக, சுப்பிரமணியனின் கண்களுக்குள்ளே ஸரினா தேடினாள்.

அதற்கப்புறமும் அவருடன் நான் சிரித்த படியே பேசினேன். கலகலப்பாகவே பழகினேன். முன்போலவே குதூகலமாகவே இருக்க முயன்றேன் — என் சிரிப்பிலே சிரிப்பில்லை; பேச்சிலே ஜீவன் இல்லை; உற்சாகத்திலே உயிர் இல்லை.—ஏன் ?

# ஏன் ?

ஏன்? — என்னுள்ளத்திலே இந்தக் கேள்வி சுற்றிச் சுற்றி வந்தது. வானவில் வட்ட வடிவம் பெற்று, மத்தியில் முழு நிலவை வைத்துச் சுற்றினால், எப்படிச் சௌந்தர்யமாக இருக்குமோ அப்படி இன்பத்தைக் கொடுத்தது எனக்கு அந்தக்கேள்வி. ஆனால் அத்தனை இன்பத்தின் மத்தியிலும் ஒரு துன்பம்! — மறந்து விட்டேனே. ஏன்?—இந்தக் கேள்வியே 'அந்தத் துன்பம் ஏன்' என்று தானே கேட்கிறது.

செங்கோட்டை ஜங்ஷனுக்கு திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் வந்தபோது பெண்கள் வண்டியிலிருந்த நாலைந்து பெண்களும் இறங்கிவிட்டார்கள். நான் மட்டிலும் தான் இருந்தேன். கையில் மாதப்பத்திரிகை, 'மல்லிகா' விரித்தபடியே கிடந்தது. அதில் வெளி வந்திருந்த 'சந்திப்பு' என்ற சிறு கதையை நான் எப்போதே படித்து முடித்து விட்டேன். வண்டி சங்கரன்கோயில் விட்ட போது படிக்க ஆரம்பித்த நாலு பக்கக் கதையை இரண்டு மணி நேரமா படித்திருக்கப் போகிறேன்? ஆனால் எப்போது முடித்தேன் என்று தெரியாது. கதை முடிவதற்கும் என் கற்பனை தொடங்குவதற்கும் பொழுது சரியாயிருந்திருக்கவேண்டும்.

குற்றாலத்திலே அப்போது சீஸன் காலம். கடையநல்லூர் வருவதற்கு முன்பே குளுமையான தென்றல் ஜிலு ஜிலுவென்று வண்டியில் புகுந்து என்னைக் குதூகலிக்கச் செய்தது.

அச்சமயம் வண்டியில் அதிகக் கூட்டமில்லை. ஆகையால் தனிமை கெடாமலே வந்தேன். சுற்றுப்புறத்தின் அருமையான சுகம், மெயில் வண்டியின் அசைவு தெரியாத வேகம், படித்து முடித்த கற்பனை பொங்கும் கதையின் விளைவு — இத்தனையும் சேர்ந்து என்னைச் சொப்பனலோகத்தில் இருத்தின. எதிரே வேகமாய்த் தாண்டிச் செல்லும் செடி கொடிகளையும் தூரத்து ரோட்டில் ரெயிலுடன் போட்டி போட்டுக் கொண்டு ஓடிவரும் மோட்டாரையும் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தேன்.

நான் படித்த அந்தக் கதை என் நினைவு முழுவதும் நிரம்பி இருந்தது. எத்தனையோ கதைகள் கட்டுரைகள் நாம் படிக்கிறோம். எல்லாம் சுவை அளிக்கின்றனவா? எல்லாம் நம் எண்ணங்களைக் கிளறி விடுகின்றனவா? எங்கோ, எப்போதோ, ஒன்றிரண்டு! அந்தமாதிரி அபூர்வக் கதைகளில் இது ஒன்று. அந்தக் கதாசிரியர் வேணுவை நான் ஒருமுறை பார்த்திருக்கிறேன். சங்கத்தின் விழாவின் போது பேச வந்திருந்தார். இளைஞர்; அழகர்; மணி மணியாகப் பேசினார். சிரிக்கச் சிரிக்கப் பேசி அந்தச் சபையையே குலுங்க வைத்துவிட்டார். ஆனால் அத்தனையும் உயர்தரமான கருத்துக்கள். அவர் பேசி உட்கார்ந்த போது ஏகப்பட்ட ஆரவாரம். நானும் சற்றுப் பலமாகவே கை தட்டி விட்டேன்.

'சந்திப்பு' என்ற கதையில் முதன் முதலாக ஒரு நெருக்கடியான சந்தர்ப்பத்தில் ஒரு யுவனும் யுவதியும் சந்திக்கிறார்கள். அப்போது அவர்கள் இருவருக்கும் ஏற்படும் மனோநிலை விஷயம் சாதாரணமாகத்தானே தோன்றுகிறது? ஆனால் இந்தச் சாதாரண விஷயத்தை வைத்துக்கொண்டு அவர் என்னென்ன இந்திர ஜாலங்கள் செய்திருக்கிறார் தெரியுமா! கண்ணியமான முறை

யில் வரம்பு கடவாதபடி இத்தகைய நுட்பமான மனப்போக்கையெல்லாம் அழகாக வர்ணிக்கக்கூடிய மிகச் சிலரில் அவர் ஒருவர்.

## 2

செங்கோட்டையில் வண்டி ஊதிவிட்டது. இனி முன்போல அவ்வளவு வேகம் இராது. மலைகளை வளைத்து வளைத்துக்கொண்டு முக்கி முனகி நகர்ந்து செல்லும். இந்த ஆமை வேகங்கூடக் கூடாது என்று நான் சொல்லுவேன். செங்கோட்டைக்கும் புனலூருக்கும் மத்தியிலுள்ள இயற்கைக் காட்சிகளின் எழில் சூழ்ந்த வனப்பை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? ரெயில் எத்தனை மெதுவாய்ப் போனால்தான் என்ன? நாள் பூராவும் ஜன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டே இருந்தாலும் சலிக்காதே!

நான் ஒருத்திதான் என் வண்டி முழுவதும். அந்த இன்பத் தோற்றங்களை என்னுடன் அநுபவிக்க இப்போது என் பள்ளித் தோழி ஒருத்தி இருந்தால் இன்னும் எத்தனையோ நன்றாயிருக்கும். என்ன செய்வது? வண்டியில் ஊர் வம்படித்து வரும் பெண்கள் கூட்டம் இல்லாதிருந்ததே பெரிய காரியம். தோழியில்லாவிட்டாலும் போகிறது, தனிமை இன்பம் ஓர் தனித் தினுசல்லவா?

ரெயில் புறப்பட்டது. அப்போதுதான் ஒருவர் வேக வேகமாக ஓடிவந்தார். ஓடிவரும் ஒற்றை மனிதரை அப்போது யார் கவனிக்கிறார்கள்? அல்லது அவருக்காகத்தான் புறப்பட்ட வண்டி நிற்கப் போகிறதா? முழு மூச்சோடு ஓடி வந்து என் வண்டியின் கைப்பிடியைப் பற்றியபடியே தொங்கினார். சில விநாடிகள் சென்றன. வண்டியின் வேகம் அதிகரித்தது. வெளியில் நின்றவாறே அப்போதுதான் அவர் உள்ளே நோக்கினார். கண்களில் அவருக்கு ஏமாற்றம் தெரிந்தது. 'பெண்கள் வண்டியா!' என்று வெட்கத்தோடும், வருத்தத்தோடும் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டார்.

"பரவாயில்லை; அடுத்த ஸ்டேஷனில் வேறு வண்டி ஏறிக் கொள்ளலாம்" என்று நான் கூறினேன்.

நன்றியோடு என்னைப் பார்த்துவிட்டுச் சற்று தயக்கத்துடன் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தார்! வந்தவர் யார் என்கிறீர்கள்? சாக்ஷாத் 'சந்திப்பு' வை எழுதிய வேணுவேதான்.

நான் சற்று ஆச்சரியத்தோடு நோக்கியதை அவர் கவனித்திருக்க வேண்டும். 'வந்தனம்' என்று வாய்க்குள்ளே மெதுவாகச் சொல்லிவிட்டு எதிரே ஒரு மூலையில் போய் உட்கார்ந்தார். அவர் உட்கார்ந்த தோரணை எனக்குச் சிரிப்பை வருவித்தது. நவயுக எழுத்தாளரான ஒரு முற்போக்கு வாதி இப்படியா ஒரு பெண்ணின் முன் நாணிக்கோணிப் பழைய காலத்துப் 'புதுப்பெண்' மாதிரி நடந்துகொள்வது? சில நிமிடங்கள் மௌனத்தில் கழிந்தன. மேலே, கீழே, வெளியே, உள்ளே, என்னைத் தவிர மற்ற இடங்களிலெல்லாம் நோக்கினார். அவருக்கு இது ரொம்ப தர்ம சங்கடமாயிருந்திருக்க வேண்டும். இந்த வண்டியில் ஏறிவிட்டது மாபெரும் குற்றம் என்று கருதினாரோ, அல்லது தனித்திருக்கும் பெண் முன்னே இருப்பது பாபகரமான செயல் என்று நினைத்தாரோ தெரியவில்லை. இந்த எழுத்தாளர்கள் இப்படி எழுத்திலும் பேச்சிலுந்தான் அசகாய சூரர்கள் போலிருக்கிறது. எதிரே பெண் இருந்தால் இவருக்கென்ன கஷ்டம் வந்ததாம்!

அவர் நிலைமை பரிதாபமாக இருந்தது. நானே வலுவில் பேச்சுக் கொடுத்தேன்.

"நல்ல காரியம் செய்தீர்கள்! பெண்கள் வண்டி என்றவுடன் கீழே குதிக்காமல் இருந்தீர்களே! — இந்த மாதிரிச் சந்தர்ப்பங்களில் சிலருக்கு நடந்துகொள்ளவே தெரிவதில்லை" என்றேன்.

அவர் கொஞ்சம் நிமிர்ந்து உட்கார்ந்தார். வெட்கத்தை உதறித் தள்ளினார். பழக்கப்பட்டவர்போல் பேச ஆரம்பித்தார். தேவலையே! சீக்கிரத்தில் நல்லமாறுதல்.

"இம்மாதிரிச் சந்தர்ப்பங்களே ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். அது என் தவறு. நீங்கள் நிலைமையை

உணர்ந்து எனக்கு இந்த உதவியைச் செய்தீர்கள். வேறு யாராவது இருந்து ஒரே கூச்சல்போட்டிருந்தால் எப்படியிருக்கும்? நினைத்துப் பாருங்கள்.”

அவர் வெட்கியதற்குக் காரணம் அப்போதுதான் அறிந்தேன். பெண்களில்தான் எத்தனை விதம்! அவர் சொல்வது போலவும் சிலர் இருக்கத்தான் செய்கிறார்கள். பெரிய ரகளை செய்து ஓடும் வண்டியிலிருந்து குதிக்கச் செய்து அவரைச் சாக வைத்தாலும் வைத்துவிடுவார்கள்! ஆனால் ஆண்களை மட்டிலும் நம்பலாமா? இப்படித் தனியே ஒரு பெண் செல்கிறாள் என அறிந்து வேண்டுமென்றே இந்தச் சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொள்ளும் கயவர்களும் இருக்கிறார்கள் அல்லவா? ஆனால் இவர் அப்படி இல்லை. இவருக்கு என்னைத் தெரியாவிட்டாலும் எனக்குத்தான் இவரைத் தெரியுமே.

## 3

இருண்ட மலைக்குகையை வண்டி கடமுட என்ற சத்தத்தோடு ஊடுருவியது. வெளியில் எங்கும் ஒரே இருள். உச்சி வெய்யில் அடிக்கும் அந்த மத்தியான வேளையில் அமாவாசை இரவைப்போன்ற கருமை. ஆனால் வண்டிக்குள்ளே விளக்குப் போட்டிருந்தார்கள்.

இருவரும் அந்த விளக்கொளியில் ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டோம். பின்பு ஜன்னலுக்கு வெளியே தலையை நீட்டிக் குகைக்கப்பால் ஒளி தெரிகிறதா எனப் பார்த்தோம். மலைக் குகையிலிருந்து தண்ணீர் வடிந்து எங்கள் தலையெல்லாம் சொட்டியது. சிறிது நேரத்தில் குகையும் கடந்தது.

வண்டிப்பாதைக்கு இரு மருங்கிலும் நெருக்கமான புதர்கள். அவற்றில் மலர்ந்த பூக்கள் வண்டியில் போடுவனபோல அவ்வளவு அருகே வளைந்துகொடுத்து நின்றன. நான் வண்டியில்

இருந்த பலர் அவற்றைத் தட்டி விளையாடுவதும், பறித்துக்கொள்வதுமாக இருந்தனர். இலைகளின் வாடையும், மலர்களின் மணமும் ஒன்று கலந்து கம்மென்று உள்ளே வீசியது.

"தென்னிந்தியாவிலே இது மிக அழகான பிரதேசம். எத்தனை தரம் பார்த்தாலும் தெவிட்டாது!" என்றார் அவர்.

என்னையறியாமலே நான் கீழ்க்கண்டவாறு பதிலளித்துவிட்டேன். என் உள்ளத்தில் உறைந்து கிடந்தது வெளிவந்துவிட்டது.

"உண்மைதான்! ஆனால் கதாசிரியர்களும் கவிஞர்களும் நினைத்த இடத்திலெல்லாம் இதைவிட அபூர்வமான பிரதேசங்களைச் சிருஷ்டி செய்துகொள்ளலாம்."

அவர் பிரமித்துவிட்டார். வியப்போடு என்னைக் கவனித்தார். பிறகு அகப்பட்டுக்கொண்ட குற்றவாளி போன்ற பாவம் அவர் முகத்தில் படர்ந்தது.

"வந்து...என்னை வந்து..."

"ஆமாம், தெரியும்; உங்களுடைய கதையைத்தான் இப்பொழுது 'மல்லிகா'வில் படித்தேன். நன்றாக எழுதியிருக்கிறீர்கள். வேண்டுமென்று புகழவில்லை, ரொம்பவும் ரசித்தேன்" என்றேன்.

"மல்லிகா வந்துவிட்டதா? கதை நன்றாயிருக்கிறதா? சந்தோஷம். உண்மையில் எனக்கு உங்களைப் போன்ற ரசிகர்களின் பாராட்டைக் கேட்க எவ்வளவு ஆனந்தம் தெரியுமா?" என்றார்.

அவருக்கு அளவிடமுடியாத ஆனந்தந்தான்; பச்சைக் குழந்தையைப்போல் சந்தோஷப்பட்டார். நானும் கேள்விப்பட்டிருக்கிறேன்; சில கலைஞர்களுக்கு உண்மையான பாராட்டுதல் கிடைத்துவிட்டால் அவர்கள் தங்களையே மறந்துவிடுவார்களாம்.

இருக்காதா என்ன? தான் பெற்ற குழந்தையைப் பற்றிப் புகழ்ந்து பேசும்போது எந்தத் தாய்தான் மகிழ்வடையமாட்டாள்?

வண்டியில் அவர் ஏறியபோது 'மல்லிகாவை' அவசரத்தில் கீழே பெட்டியின்மேல் வைத்திருந்தேன். இப்போது திரும்பவும் எடுத்து அவரிடம் கொடுத்தேன். பிரித்தால், அவருடைய கதை வந்தது.

அதற்குப்போட்டிருந்த படத்தைப் பார்த்து "ஏற்ற முறையில் படம் போட்டிருக்கிறார்கள். கதையின் கருத்தைப் புரிந்துகொண்டு படம் எழுதுபவர்கள் ரொம்பக் குறைவு. 'மல்லிகா'வில் இந்த விஷயமாய்ச் சரியான கவனம் செலுத்துகிறார்கள்" என்றார்.

இன்னும் ஏதேதோ சொன்னார். எல்லாம் கலையைப் பற்றியும், அழகைப்பற்றியும், ரசனையைப்பற்றியுமேதான்.

நான் அவருடைய ஒவ்வொரு வார்த்தையையும் ஆர்வத்தோடு கேட்டேன். அவற்றிற்கு என் சம்மதத்தைத் தெரிவித்தேன். அவ்வப்போது வெளிப்பட்ட பாவ உணர்ச்சிகள், குரல் மாற்றங்கள் எல்லாமே எனக்கு இனிமையாய் இருந்தன. எழுத்துக் கலையிலும், மேடைப் பிரசங்கத்திலும் மாத்திரம் இவர் கெட்டிக்காரர் அல்ல. சரளமாக இவருடன் சம்பாஷிப்பதிலேயே ஒரு கவர்ச்சி இருக்கிறது.

ஒரே சமயம் என் மனம் இரண்டு வேலைகளைச் செய்து கொண்டிருந்தது. அவருடன் பேச்சுக் கொடுத்தது, அதில் ஈடுபட்டது ஒரு பகுதி; மற்ற பகுதி அவருடைய கதையையும் அதற்குப் போட்டிருந்த படத்தையுமே வட்டமிட்டது. கதையிலும் இதைப்போலவேதான் இருவர் சந்திக்கின்றனர்; இதே ரயில் பிரயாணம்; படங்கூட எங்களைப்போல இருவர் எதிர் எதிராய் உட்கார்ந்திருப்பதுதான்.—அவர் தம் கலையின் கற்பனையில் தீட்டிய சித்திரத்தை இப்போது நடைமுறையில் அனுபவிக்கிறாரா? அல்லது அதை அனுபவிப்பது நானா?

எல்லாக் கதைகளையும் போலவே அதுவும் கலியாணத்தில் தான் வந்து முடிந்தது!

## 4

மலையருவிகள் தாவி விழுவதை இருவரும் கண்டு களித்தோம். இயல்பாகவே இத்தகைய காட்சிகளில் அவருக்குச் சிரத்தை அதிகம் இருக்கும். அவர் கலைஞர். ஆனால் எனக்கும் இதில் ஏன் பன்மடங்கு உற்சாகம்? தாவும் அருவியுடன் உளம் தாவு வதுபோலவும், வீசும் தென்றலுடன் அதுவும் வீசி மிதப்பது போலவும், தவழும் பசுமையில் அது நெளிந்து வளைவதுபோலும் உணர்கிறேனே!

வழிநெடுக ரப்பர்த்தோட்டங்கள், பாக்கு மரங்கள், தேக் கங் காடுகள், இவை மாறி மாறி வந்தன. ஒரு இடத்தில் ரெயில் மிக மேடான பாதையில் சென்றது. எட்டிப் பார்த்தால் கிடு கிடு பாதாளம். கீழே முளைத்திருந்த தென்னை மரங்கள் சிறு சிறு குச்சிகள்போல் தெரிந்தன. அடுத்தாற்போல் பள்ளத்தாக்கு. இருபுறமும் குன்றுகளிலிருந்து பெரும் பாறைகள் புரண்டு வண்டி மீது விழுமோ என அஞ்சவேண்டியிருந்தது.

இப்படியாக நாங்கள் ரெயில் வண்டியில் பறந்துகொண் டிருந்தோம்.

"தாங்கள் தவருக நினைத்துக்கொள்ளக்கூடாது. எதிர்பாரா மல் இந்த வண்டியில் பிரயாணம் செய்ய நேரிட்டாலும் இத் தனை வசதி எனக்கு வேறு இடத்தில் கிடைத்திருக்காது. கூட் டத்தில் இடித்துப் புடைத்துக்கொண்டு இயற்கையை எங்கே அனுபவிக்க முடியும்?—அடுத்த ஸ்டேஷனுக்கப்புறம் எப்படியிருந் தாலும் பரவாயில்லை. பார்க்க வேண்டியதும் ரசிக்க வேண்டி யதும் இந்தப் பிரதேசம் தான்" என்றார்.

அவருடைய பூர்வ பீடிகையை நான் பெரிதும் விரும்பவில்லை. அளவுக்கதிகமான முன் ஜாக்கிரதையுள்ள மனிதர் போலிருக்

கிறது, என்றாலும் தாம் உணர்ந்ததை மறைக்காமல் கூறிவிட்டார். அவர் எதை உணர்ந்தார்? அவருக்கேற்பட்ட இந்த அசந்தர்ப்பத்தால் அவருக்கு லாபம்! இதைக் கேட்பதில் எனக்கு மகிழ்ச்சி.---ஏன் எனக்குமே லாபந்தான்! உண்மையை உங்களிடம் ஏன் மறைக்க வேண்டும்? தோழி ஒருத்தி இல்லையே என்று முன்பு நினைத்தேன், தோழியின் இடத்தில் தனிமையைப் போக்க இவர் வந்தார் 'தோழியின் இடத்தில்' என்று நான் சொல்வது சரியா?

“நானும் இதனால் சந்தோஷமடைகிறேன்” என்று சிரித்துக் கொண்டே சொன்னேன். என் முகத்தை அந்தக் கணம் அவர் நோக்கினார். அவர் கலைக் கண்களுக்கு என்னுடைய அந்தச் சிரிப்பு முகம் அழகாய்த்தான் இருந்திருக்கும்...

வண்டி வேகமாய்ப் போவதாய்த் தெரிந்தது. சீக்கிரம் அடுத்த ஸ்டேஷன் வந்துவிடுமோ? ஏன் மனம் ஒருவிதமாக நிலைகொள்ளாமல் அவசரப்படுகிறது?......எத்தனையோ, பிரயாணிகள் வருகிறார்கள்; போகிறார்கள்; அப்போதெல்லாம் 'எங்கே இவர்கள் அடுத்த ஸ்டேஷனில் இறங்கிவிடுவார்களோ' என்று நெஞ்சு கவலைப்படுகிறதா? அப்படியானால் இன்று ஏன் எதற்கு இத்தனை பதை பதைப்பு?

அவசரத்தை மறைப்பதற்காக நான் அந்தக் கதையைப் பற்றி அவரிடம் மீண்டும் பிரஸ்தாபித்தேன். மறைப்பதற்காக மட்டுமல்ல.—

“உங்கள் கதையில்கூட இப்படித்தான் ரெயிலும் அதில் பிரயாணமும் வருகிறது!” என்று சொல்லிவிட்டு ஏனோ சொன்னேன் இதை என உதட்டைக் கடித்துக்கொண்டேன். ஆனால் அதற்காற்போல் அவரிடமிருந்து என்ன பதில் வரப்போகிறது என்பதில் விசேஷ அக்கறை.

"அது ஒரு உண்மைக் கதை!" எனத் தொடங்கினர். மனம் உடனே அதல பாதாளத்தில் அழுந்தியது.

"உண்மையா?" என்றேன்.—அந்தக் கேள்வி கூடத் திராணி யற்றதாயிருந்தது.

"ஆச்சரியமாயிருக்கிறதா?" என்ருர்.

ஆச்சரியம் எதற்கு? எல்லா உணர்ச்சிகளுமே ஒடுங்கிப் போனது இந்த கதாசிரியருக்குத் தெரியவில்லைபோலும். தெரியாமலே இருக்கட்டும்.

மேலே கவனித்தேன்.

"சென்ற வருடம் இப்படித்தான் அந்த மாஜி மாணவி சரோஜினியோடு ரெயிலில் பிரயாணம் செய்தேன்........."

"யார் அந்த மாஜி மாணவி!"

"பிரயாணம் வாழ்க்கைப் பிரயாணத்தில் கொண்டுவந்து விட்டது........."

என்ன! உற்சாகமெல்லாம் என்னைவிட்டு அறவே பறந்து விட்டதே.........!

"இப்போது அவள் என் மனைவி!"

"ரொம்ப சந்தோஷம்" என்று சந்தோஷத்தை வரவழைத்துக்கொண்டு பதிலளித்தேன்.

ஃ ஃ ஃ

அதற்கப்புறமும் அவருடன் நான் சிரித்தபடியே பேசினேன். கல்கலப்பாகவே பழகினேன். 'இன்னும் சில நிமிடங்கள்தாம்;

அதற்குள் அடுத்த ஸ்டேஷன் வந்துவிடும்; அதுவரை முன் போலவே குதூகலமாக இருப்போம்' என்று முயன்றேன்— என் சிரிப்பிலே சிரிப்பில்லை. பேச்சிலே ஜீவன் இல்லை; உற்சாகத்திலே உயிர் இல்லை. இந்த மாறுதலுக்கு என்ன காரணம்? வண்டியில் இந்த ஒருமணி நேரமும் எனக்கிருந்த இன்பக் கிளர்ச்சிகள் இந்தக் கடைசி நிமிஷத்தில் எங்குபோய் ஒளிந்தன? ஏன்?

நல்லவேளை, பங்களாவுக்கு நெஞ்சு கிடையாது. கல்லாலும் சுண்ணாம்பாலும் கட்டப்பட்டிருந்தாலும், தன் எஜமானனைப்போல் அவ்வளவு கொடுமை வாய்ந்ததல்ல. வந்தவனுக்கு புகலிடம் அளித்தது.

# எல்லோருக்கும் பெய்த மழை

சுடுகாடுபோல், இல்லை, அதிலும் மோசமாக - பணம் படைத்த அந்தக் கிராமத்து மிராசுதார்களின் உள்ளம்போல் - அந்தக் கிராமமும் அதைச் சுற்றியுள்ள பிரதேசமும் வறண்டு கிடந்தன. நிலத்தின் வெகு ஆழத்துக்கு அப்பாலுங்கூடக் கொஞ்சமும் ஈரம் இல்லை. நாலு வருஷங்களுக்கு முன்பு வரையில் நன்றாக விளைந்து பயிர் செழித்துக்கொண்டிருந்த அந்த வயல்கள் இப்போது புல்பூண்டுகள்கூட முளையாதபடி அப்படிக் கருகிப்போய்ப் பாளம் பாளமாய் வெடித்துக்கிடந்தன.

ஊரை வளைத்துச்சென்ற முல்லையாறும் புதுப்புனலை ருசி கண்டு பலநாட்களாகிவிட்டன. இப்போது அந்த மணல் வெளியே நெளிந்தது கானல் நீர்தான்.

ஊரிலே ஓய்வொழிவில்லாத வேலை சுடுகாட்டுக்கு. நாளுக்கு நாள் அதற்கு வேலை பெருகிக்கொண்டே வந்தது. கிராமத்தில் தாண்டவமாடிய பசியும் பட்டினியும் பஞ்சமும் அந்தச் சுடுகாட்டிற்கு அதிக உணவை அளித்தன. போதாதற்கு அதிக உஷ்ணத்தால் அங்கு அம்மை நோய் வேறே!

கிராமத்துச் செல்வர்கள், அந்த நிலங்களின் வளத்தாலும் அவற்றிற்கு வளம் அளித்த குடியானவர்களின் வேர்வையாலும்

செழிப்புற்றவர்கள், பட்டணத்துப் பக்கம் புறப்பட்டுவிட்டார்கள். பசியும் பஞ்சமும் அவர்களைப் பாதிக்கவில்லையென்றாலும், அந்தக் கிராமத்தின் மத்தியில் இருக்க அவர்களுக்குப் பிடிக்கவில்லை. கோடைக்காலத்திற்கு அவர்களுக்கு உதகமண்டலமும் குற்றாலமும் குளிர்ச்சியைக்கொடுத்தன. மற்றநாட்களை நகரங்களின் ஆடல் பாடல்களிலும், கேளிக்கைகளிலும், உல்லாச யாத்திரைகளிலும் கழித்தார்கள்.

இந்த நாலு வருஷங்களாய் மழை பெய்யாததால் அவர்களுக்குப் பெரிய நஷ்டமில்லைதான். என்றாலும் குவிந்துகொண்டே மலைபோல் வளரும் களஞ்சியம் இப்போது கரைந்துகொண்டே வருவதென்றால் யாருக்குத்தான் பொறுக்கும்? அவர்களும் முணுமுணுக்கத்தான் செய்தார்கள்.

முணுமுணுத்துக்கொண்டே காட்சி சாலைகளை அலங்கரித்தனர்; முணுமுணுத்துக்கொண்டே குடித்துப் புரண்டனர்; முணுமுணுத்துக்கொண்டே தாங்கள் அருமையாய் வளர்க்கும் நாய்களுக்கு வெல்வெட் மெத்தை தைத்துப் போட்டனர்.

## 2

கிராமத்துக் குடியானவர்களோ, தங்களுக்கு உழைப்புரிமை மட்டும் அளித்த அந்த நிலங்களைப் போலவே காய்ந்தார்கள். நிலங்களில் வகை தெரியாமல் முளைத்துவிட்டுப் பின்பு கருகும் பல்பூண்டுகளைப்போல் அவர்களுடைய மனைவி மக்கள் கருகினார்கள். ஒவ்வொரு நாளும் கிராமத்து மயானம் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாய்ப் பற்றி எரிந்ததோ, அதேபோல் அங்கு உயிரோடு விடப்பட்ட அந்த ஏழைகளின் வயிறுகளும் நாளுக்கு நாள் அதிகமாய்ப் பற்றி எரிந்தன.

பால்மணம் மாறாத குழந்தைகள் தாய்களின் வறண்டுபோன மார்பகத்தைக் கவ்விப் பாலில்லாமல் கதறின. ஆடுமாடுகள் ஏற்

கனவே புல்லில்லாமல் மாண்டுபோனதால் அவற்றின் பாலுக்கும் வழியில்லை. ஆனால் அதே கிராமத்தின் செல்வர்களுக்கு அந்தக் குறை ஏது? தாய்ப்பால் குடித்தால் தாயின் உடல்கெட்டு விடுமென்று அவர்கள் வெள்ளைச் சீமையிலிருந்து புட்டிப்பால் வருவித்தார்கள். அவர்களுடைய குழந்தைகள் அங்கே பட்டுப் பாயில் புரள இங்கே குடியானவர்களின் சிசுக்கள் வேப்பிலையில் நெளிந்து அம்மையுடன் போராடின.

உழவர்களின் சாவு மிராசுதார்களுக்கு ஓரளவு வருத்தத்தைத் தான் கொடுத்தது.

"இப்படியே எல்லாப் பசங்களும் செத்துப்போயிட்டா, அப்புறம் நம்ம நிலத்தைச் சாகுபடி செய்யறது யார்? அடுத்த வருஷமே மழை பெய்தா ஆள்வேண்டாமா?" என்று கவலைப்பட்டார்கள்.

அவர்களுக்குள்ளே சமாதானம் சொல்லவும் ஒருவன் இருந்தான்.

"வேலைக்காரங்களைப் பத்திக் கவலைப்படாதே! உலகமே கூலிக்காரனுடை குடிசையாலேதான் நிறைஞ்சிருக்கு. ஒரு நாளைக்கு ஒரு வேளை சோறுபோட்டா, உயிர்போற மட்டும் நமக்காக உழைப்பானுக. நம்ம ஊரிலே இருக்கிறவன் செத்தா அடுத்த ஊர்க்காரன் இல்லை?" என்றான்.

கிராமத்திலிருந்து வந்த செய்தி பிரபுக்களைத் திடுக்கிடவைத்தது. ஊரில் கொள்ளையும் கொலையும் நடக்கின்றனவாம்! குடியானவர்களே வீடு புகுந்து திருடுகிறார்களாம்!

சிலர் பதறிப்போய் ஓடிச்சென்று நிலையைச் சீர்திருத்தினர். சட்டத்தையும் அமைதியையும் நிலைநாட்ட அவர்களுக்காகப் போலீஸ் உதவி செய்தது. மற்றவர்கள் அதைப் பற்றிக் கவலைப்படவே இல்லை. அவர்கள் சொத்தில் வீட்டையும் நிலங்களையும்

தவிர மற்ற யாவும் பணமாகப் பட்டணத்துப் பாங்கியில் தூங்கின. நிலத்தையும் வீட்டையும் வேண்டுமானால் குடியானவர்கள் பெயர்த்துக்கொண்டு போகட்டுமே!

## 3

பூலோகத்தில் இந்தமாதிரி இருக்கும்போது, வானலோகத்து மன்னன் சூரியதேவன், மேகராஜனை அழைத்தான். "மாதம் மும்மாரி பூலோகத்திலே தவறாது மழை பெய்யச் செய்கிறீரா" என்றான்.

"ஆம் பிரபு. மாதம் மும்மாரி பெய்யவேண்டிய இடத்தில் மாதம் மும்மாரி, வருஷம் மும்மாரி பெய்யவேண்டிய இடத்தில் வருஷம் மும்மாரி, மூன்று வருஷத்துக்கு ஒரு மாரி பெய்யவேண்டிய இடத்தில்..."

"ரொம்ப சரி, முல்லை ஆற்றை அடுத்த ஒரு கிராமம் ஏன் மழையில்லாமல் நாலு வருஷங்களாய் வாடுகிறது? அதற்கு முன்பு மாதம் மும்மாரிப் பிரதேசமாக இருந்ததே அது!" என்றான் சூரியன்.

"உண்மைதான். அந்தக் கிராமத்திலே மழையின் செழிப்பினால் அதிகச் செல்வம் உண்டாகிவிட்டது. தேவைக்கு அதிகமான அந்தச் செல்வம் அவர்களை மிருக வாழ்க்கைக்குக் கொண்டுவந்திருக்கிறது. அவர்களைத் தண்டிக்கவே இந்தப் பஞ்சம்!"

"ஏழைகளும் அங்கு அதிகம் இருப்பார்கள்போல் இருக்கிறதே!"

"ஆம், அவர்கள் பரம ஏழைகள். மிகவும் கேவலமான நிலையில் இருப்பதால், அவர்களும் நியாயமாக வாழவில்லை. ஒரு சாராரை அதிகப் பணம் பேயாக்குகிறது. மற்றொரு சாராரை அதிக வறுமை திருடர்களாகவும் வஞ்சகர்களாகவும் ஆக்குகிறது."

இந்த சமயத்தில் வானத்தின் தூரத்திலே மிதந்து சென்ற மேகக் குழந்தையொன்று தான் பள்ளிக்கூடத்திலே சொல்வதற்காக ஒரு செய்யுளைத் திரும்பத் திரும்ப உருப் போட்டுக்கொண்டிருந்தது.

"நல்லார் ஒருவர் உளரேல்
அவர் பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை"

சூரியன் இதைக்கேட்டுத் துள்ளிக் குதித்தான். "கேட்டீரா அந்தக் குழந்தை சொல்வதை? இன்றே அந்தக் கிராமத்தில் எவனாவது ஒரு நல்லவன் அகப்பட்டால் அவனுக்காக மழைபெய்யச் செய்யும். நல்லவனைத் திண்டாடவிடுவது நமக்கு அழகல்ல."

எப்படியோ அந்த உலர்ந்துபோன கிராமத்தில் ஒரே ஒரு நல்லவன் - சுப்பையா - கிடைத்தான். அவனும் ஒரு விவசாயி. கோரமான இந்தப் பஞ்சம் அவனை என்னதான் சோதனைசெய்தும் அதற்கு அவன் மசியவில்லை. திருடாமல், பொய் சொல்லாமல் இத்தனை கஷ்டத்திலும் நல்லவனாக இருந்திருக்கிறான். நல்லவனாக இருந்த இதே காரணத்தால் அவனுடைய மனைவி, இரண்டு குழந்தைகள், தகப்பன் இத்தனை பேரையும் பறிகொடுத்து விட்டான். அந்த வீட்டில் இருந்த கடைசிப் பேர்வழி அவன். அவனுக்கே, தான் இன்னமும் சாகாமல் உயிரோடிருந்தது ஆச்சரியமாக இருந்தது.

தொடர்ந்தாற்போல் ஒரு வேளைக் கூழில் ஒரு மாதத்தைக் கடத்திய சுப்பையா, சென்ற இரண்டு நாளாய் அதுவும் இல்லாமல் தண்ணீர் குடித்துக்கொண்டே வீட்டில் கிடந்தான். வீடு என்று சொல்வது சூரியன், சந்திரன், காற்று முதலியவை தங்கு தடையின்றி நுழைய அதிகாரம் அளிக்கப்பட்ட ஒரு கீற்றுக் குடிசை. அவனுடைய மிராசுதார் அவனுக்குக் கட்டிக்கொடுத்தது இது. அந்தக் குடிசைக்கும் மிராசுதார் பங்களாவுக்கும் அதிக தூரம் இல்லை. அவர்கூட இப்போது பட்டணத்தில்தான் இருந்தார்.

## 4

ஓர் இரவு.

நல்லவனைக் கண்டுபிடித்த மகிழ்ச்சியில் வானம் வாண வேடிக்கை செய்தது. மின்னல்கள் நர்த்தனம் புரிந்து கண்ணைப் பறித்தன. இடி முழக்கம் உலகையே பெயர்த்துப் புரட்டுவது போல கிடுகிடுத்தது. பெரியவர்களுக்கு மரியாதை செய்வதென்றால் உலகத்தவர்கள் என்ன என்னவோ பிரமாதமாய்ச் செய்கிறார்கள். வானம் இதையெல்லாம் அந்த ஒரு நல்லவனுக்காகச் செய்தது.

இத்தனை முன்னேற்பாடுகளுக்குப் பிறகு வானம் வெடித்துக் கொட்டியது போன்ற அந்தக் கோரமழை!

சுப்பையா மின்னல்களைத் தாங்காது கண்களை மூடிமூடித் திறந்தான். இடித்த இடிகள் அவனைப் படுக்கையிலிருந்து பயத்தால் மேலே தூக்கிப்போட்டன. இடிந்துகொண்டிருந்த மண் சுவரோடு ஒன்றாய் ஒட்டிக்கொண்டான்.

மழை அவனை லேசில் விட்டுவிடுமா? நல்ல மனிதன் அல்லவா?

கூரையைப் பொத்துக்கொண்டு குடம் கொண்டு கொட்டியது. சுவரும் மெதுவாக அவன்மேல் சரிவதாக தெரிந்ததால், பலகைத்தனையும் சேர்த்து எழுந்து வெளியே வந்தான். தேகத்திற்கு நடக்கத் திடம்வேண்டுமே! கொஞ்சம் மழைத் தண்ணீரால் நாவை நனைத்துக்கொண்டான். மழைக்கு ஒதுங்குவதற்காகத் தன்னுடைய மிராசுதாரின் பங்களாவைப் பார்த்தான்.

ஆச்சரியந்தான்; அங்கே விளக்கு எரிந்தது.

சுப்பையாவுக்கு குபீரென்று சந்தோஷம் பொங்கியது. இத்தனை துன்பங்களும் ஏதோ கனவுலகில் நடந்ததாக உணர்ந்தான்.

மேலே அறைந்துகொண்டிருந்த நீருவியின் வேகங்கூட அவனுக்கு உறைக்கவில்லை.—மிராசுதார் பட்டணத்திலிருந்து வந்துவிட்டார்! மழையும் பெய்துவிட்டது! இனி அவனுக்கு என்ன குறை? நசித்துப்போன அவன் குடும்பத்தைப்பற்றிக் கேட்டு அவர் ஆறுதல் சொல்லப் போகிறார். சீக்கிரம் புது வீடு கட்டித் தருவார்! இன்னும்.........

அந்த விநாடியிலே அவனுக்கு வேண்டியிருந்தது, மழைக்கு ஒதுங்க ஒரு மூலை. அவனுடைய மிராசுதாரின் பங்களாதான் அருகிலிருந்தது. கால் தரையில் ஊன்றுவதுகூடத் தெரியாமல் இடியையும் மழையையும் அறவே மறந்துவிட்டுக் கனவுலக மகிழ்ச்சியில் பங்களாவை நோக்கி நடந்தான். வழியிலே முழுங்கால் அளவு தண்ணீர், மேடுகள், பள்ளங்கள்; இருந்தால் என்ன?

நல்ல வேளை, பங்களாவுக்கு நெஞ்சு கிடையாது. கல்லாலும் சுண்ணாம்பாலும் கட்டப்பட்டிருந்தாலும், தன் எஜமானனைப் போல் அவ்வளவு கொடுமை வாய்ந்ததல்ல. வந்தவனுக்கு புகலிடம் அளித்தது.

சுப்பையாவின் கால்கள் வெடவெடத்தன. தேகமே ஆடியது. பற்கள் கிட்டிவிட்டன. ஆனாலும் சிரமத்தோடு ஜன்னல் வழியே மெல்ல எட்டிப்பார்த்தான். அவ்வளவுதான்!

உள்ளேயிருந்து ஒரு புலி உறுமியது, அது அவனுடைய அருமை எஜமானர். பண்ணைக் குடியானவர்களே கொள்ளையடிக்கிறார்கள் எனக் கேள்விப்பட்டுத் தலை தெறிக்க ஓடிவந்தார்.

"யாரடா அது?"

சுப்பையா வாயைத் திறக்க முயன்றுகொண்டிருந்தான். "யாரடா அது? கேட்கிறேன், திருட்டு முழி முழிக்கிறே?"

வெளியே வந்து பார்த்தார். தம்முடைய பண்ணைக் குடியானவன்.—இல்லை அவன் பிசாசு, எலும்புக்கூடு!

அவர் கண்களுக்கு அந்த உருவம் அந்த நேரத்திலே கொள்ளையடிக்க வந்ததாய்த் தோன்றியது.

"திருட்டுப்பயல்! நேரம் பாத்தியா, நேரம்? பொழுது விடியட்டும்; உன்னைக் கட்டிவச்சு உதைக்கச் சொல்றேன்!"

அவனுடைய எஜமானனா அப்படிப் பேசினான்?

உதயகாலத்தில் சூரியன் வந்து தன் குளிர்ந்த கண்களால் அந்தக் கிராமத்தைப் பார்வையிட்டான். எவனுக்காக மழை பெய்யச் சொன்னானோ அந்த நல்ல மனிதனின் பிரேதம் அவனுடைய எஜமானன் வீட்டுக்கு எதிரே சகதியில் குப்புறக் கிடந்தது, அவன் கண்களை உறுத்தியது.

மேகக் குழந்தையின் அந்தப் பாடல் அவன் செவியில் மீண்டும் கேலியாக நகைப்பதைக் கேட்டான்:

"நல்லார் ஒருவர் உளரேல்
அவர் பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை!"

அமுத ரகசியத்தின் கவிதை சொல்லும் முகந்தான் அது. ஆழக் கடலின் நீலப் பரப்பில் கரிய வட்டப் படகோட்டும் வண்ண விழிகள்தாம் அவை. உருகக்கூடிய பொன்னையும் தந்தத்தையும் ஒன்றாக்கிச் செய்த பிம்பம்தான் அவள். ஆனால்...........

# காதலின் உருவம்

பழைய நினைவுகளின் மந்தியிலே சிற்பி சிவநாதன் மூழ்கிப் போய் உட்கார்ந்திருந்தான். இதே மாலை நேரந்தான் அன்று கூட. வெளி உலகம் அழகாகத்தான் இருந்தது. வீடு திரும்பும் பசுக்களின் கிண்கிணி நாதமும், அவற்றிற்குப் பின்னே வந்த இடைப் பையனின் புல்லாங்குழலும் அன்று மகிழ்வைத்தான் ஒலித்தன.

ஆனால், உலகம் அத்தனை உற்சாகத்தோடு இருந்தபோது சிவநாதன் அழுது கொண்டிருந்தான். வாழ்விலே அவன் நினைத்தும் இராத பயங்கர சோகம் அவனை அப்படி உலுக்கிவிட்டது. கதறினான்; மோதிக்கொண்டான்; தலைமயிரைப் பிய்த்துப் பைத்தியமானான். அவன் மடியிலே அவனுடைய துணைவி மல்லிகா பிணமாய்க் கிடந்தாள். சற்று முன்புதான் கொஞ்சிப் பேசிய அந்த முகம் பாம்பின் விஷத்தால் கறுத்துப்போய்விட்டது. கற்பனை ஊற்றாக அவனுக்கு உதவிய அக்கண்கள் சாம்பல் பூத்து மேலே சொருகிக் கொண்டன. அந்த முகத்தைத் தூக்கித் தன் முகத்தோடு வைத்துக் கொண்டு எத்தனை நாழிகை கதறினானோ தெரியாது. இருள் சூழ்ந்துவிட்டது. பக்கத்தில் உள்ளவர்கள் அனைவரும் வந்து ஆறுதல் கூறினார்கள். ஆனால் அவர்களாலேயே இந்தக் காட்சியைத் தாங்க முடியாதபோது, சிவநாதன் எப்படி சகித்திருப்பான்?

அதிலிருந்து ஒவ்வொரு நாள் அழகிய மாலை நேரமும் அவனுக்குக் கொண்டு வந்து தரும் முதல் பரிசு இந்த நினைவுதான். இன்று அதன் வேகம் பன்மடங்காக இருந்தது. காரணம் அரசன் இன்று அவனை அழைத்துக் கூறிய வார்த்தைகள்தான்.

“அரசியின் சிலை ஒன்றைச் செய்து தரவேண்டும். அது என் காதலின் உருவாக அமையவேண்டும். தெரிகிறதா?” என்று கண்களால் சிரித்தபடி, பக்கத்தில் நின்ற அரசியையும் பார்த்துக் கொண்டே கூறினான் அரசன்.

‘காதலின் உருவம்!’—தன் வீட்டுத் தோட்டத்தில், தன் மனைவியைப் பாம்பு தீண்டிய இடத்தில்... உட்கார்ந்திருந்த சிற்பி, அரசன் கூறிய இரண்டுவார்த்தைகளைத் தனக்குள் முணுமுணுத்தான். உடனே அவசர அவசரமாகக் கால்கள் அவனைக்கலைக்கூடத்தின் உள்ளே இழுத்தன. அங்கிருந்த மல்லிகாவின் சிலையைப் போய்க் கட்டிக்கொண்டான். “நீ தான் என் காதலின் உருவம்! அழியாத—எனக்குப்பின்கூட—நிலைத்திருக்கும் உருவம்!” என்று கதறினான். காதல் புது மலராக மணம் சிதறிய போது அவனால் வடிக்கப்பட்ட உயிர்ச்சிலை அது. ஆனால், என்றுமே அது அவனுக்குப் புதிய மலர்தான்.

## 2

அலைமோதிக் கிடந்த சிவநாதனின் மனம் இந்தப் புது வேலை கிடைத்ததிலிருந்து அமைதி அடைந்தது. அது மாத்திரமல்ல; அமைதியிலிருந்து பிறந்த உற்சாகம் வேறே. அவன் காதலுக்காக அல்லவா சிலை அமைக்கிறான்.

அரசன் சற்று முன்புதான் அரசியைத் தோட்டத்து மர நிழலில் கொண்டு வந்து விட்டுச் சென்றான். ஆசனத்தில் அரசி அமர்ந்திருந்தாள். எதிரே சிற்பி தன் சிற்றுளியுடன் கல்லுக்கு உருவம் கொடுத்துக்கொண்டிருந்தான். அரசி அழகி. தோட்டத்தில்

மலர்ந்த எண்ணற்ற ரோஜாக்களில் சிறந்த ரோஜாவாக அவள் விளங்கினாள். இளமையின் மெருகும், ஆடம்பர அணிகளின் அலங்காரமும் சிற்பியின் கலைக் கண்களுக்கு அற்புத விருந்தாக இருந்தன. ஒரே ஒருமுறைதான் அரசியின் முகத்தை அவன் பார்த்தான். அதை மேலும் மேலும் கூர்ந்து கவனிக்க வேண்டிய கட்டம் இன்னும் அவனுக்கு வரவில்லை. சிலையின் மற்ற பாகங்கள் அனைத்தையும் முடித்துவிட்ட பிறகுதான், அந்தச் சுந்தர வதனத்தையும் அதில் சுடர்விடும் இரு ஒளி மணிகளையும் அவன் அமைக்க வேண்டும்.

ஒருமுறை பார்த்த அந்த மின்னும் நேரத்திலேயே அவன் மார்பு திக்கென்றது. உணர்ச்சியை அவனால் மறைக்க முடியவில்லை. அவன் முகம் பளீரென வெளுத்தது.

அழகு ரகசியத்தின் கவிதை சொல்லும் முகந்தான் அது. ஆழக் கடலின் நீலப்பரப்பில் கரிய வட்டப் படகோட்டும் வண்ண விழிகள்தாம் அவை. உருகக்கூடிய பொன்னையும் தந்தத்தையும் ஒன்றாக்கிச் செய்த பிம்பந்தான் அவள். ஆனால் அழகு ரகசியத்தில் கவிதைச் சோகக் குரல் ஒலிக்கிறதே! கரு வட்டப் படகுகளை வேதனைப் புயல் மோதி எங்கோ ஒதுக்குகின்றதே! தங்கமும் தந்தமும் ஒன்றாய்க்கூடிய முகம் தன் நினைவை இழந்ததாகக் காண்கின்றதே!

சிற்பியின் பார்வையில் ஏற்பட்ட மாறுதலை அரசி அறிந்துகொண்டாள். சிவநாதனைப்பற்றியும் அவனுடைய வாழ்வின் அதிர்ச்சியைப்பற்றியும் அவளுக்கு ஏற்கனவே தெரியும். தனக்குள்ளே மெதுவாக ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டாள்.

சிவநாதன் உடனே தனக்குள் இப்படிச் சமாதானம் செய்துகொண்டான். “ஏதாவது கணவன் மனைவிக்குள் விசித்திரமான பிணக்கு ஏற்பட்டிருக்கும். ஒன்றுமில்லாததில்தான் பெண்கள் பிரமாதமான வாட்டம் அடைந்துவிடுவார்களே! மல்லிகாகூட

இப்படித்தான் ஒரு நாள் முழுவதும் என்னுடன் பேசாமல் உம்மென்று முகத்தை வைத்துக் கொண்டிருந்தாள். அவளுடைய சிலையை நான் செய்து முடித்தவுடன், அவளெதிரிலேயே அதை ஆசைதீர முத்தமிட்டுவிட்டேனே! அந்தராகத்தில் சேர்ந்த கோபம் இது!" என்று தன்னைச் சமாதானம் செய்துகொண்டான்.

அடுத்தாற்போல் அவளைப்பற்றி அதிகம் சிந்திக்காமல் அவனுடைய கரங்களைக் கல்லில் நடனமாட விட்டான். கல்லும் அழகு அழகாய் உருப்பெற்று வந்தது. ஏனோ, மறுநாளும் அவனுக்கு அரசியின் முகத்தை நோக்கவேண்டும் என்று தோன்றியது. என்ன ஏமாற்றம்! முதல்நாளைப் போலவே சோகம் அந்த இளம் வதனத்தைப் பனித்திரையிட்டு மூடியிருக்கிறதே! மறுநாள் மாத்திரமல்ல! ஒவ்வொருநாளும் அது அப்படியேதான் இருந்தது. சிலையில் வடித்த சோகச் சித்திரம் அவள்......

“சற்றே திரும்புங்கள்” என்று வினயத்தோடு எப்போதாவது சிற்பி வேண்டிக்கொண்டால், மெல்லிய புன்னகையுடன் அரசி அந்தப்பக்கம் திரும்புவாள். ஆனால், அந்த அழகிய புன்னகையிலும் அழியாத சோகமொன்று அமிழ்ந்து கிடக்கத் தவறுவதில்லை.

சிற்பியின் நெஞ்சத்துள்ளே அரசியின் சோகம் புழுவாய் அரித்தது. மனத்துக்குள் பலமாதிரியான துன்பக் கற்பனைகள் செய்து பார்த்தான். ‘காதலின் உருவம்!’ காதலின் உருவமா அவள்? அப்படி அவன் கலைக் கண்களுக்கு அவள் தோன்றவில்லையே!

## 3

காலம் வந்து விட்டது.

தோட்டத்துத் தென்றலில், அரசியின் பிறைபோன்ற நெற்றியில் புரளும் கேசத்தையும், அவளது அடர்ந்து வளைந்த புருவங்களையும், கருவண்டுகளாய் வட்டமிடும் விழிகளையும் கல்லில் பிரதிபலிக்கச் செய்யவேண்டிய காலம் வந்துவிட்டது. ஆனால் [illegible]

துன்பத்தை அதிகமாகச் சுமந்துகொண்டே வந்த நெஞ்சுக் கனத்துடனேயே சிவநாதன் தன்னுடைய பணியைச் செய்து வந்தான். மலர்ந்த கண்கள், விரிந்த இதழ்கள், சுழித்தோடும் மிருதுவான கன்னங்கள், இவற்றை அமைப்பதற்காகச் சிவநாதன் கனவுலகத்து ஜீவன்போல் அரசியை நோக்கினான்.

“எங்கே, தயவு செய்து சற்றுப் புன்னகை செய்யுங்கள்” என்று கலக்கத்துடன் அவன் குரல் ஒலித்தது.

அரசி கண் இமைகளை உயர்த்திக் கலைஞனை நோக்கினாள். பின்பு புன்னகை செய்தாள். அருப்புப் பற்கள் இதழ் மறைவிலிருந்து எட்டிப் பார்த்தன. கன்னங்களின்மேல் பரப்பிலும் கண்களின் கோடியிலும் மயிரிழை போன்ற ரேகைகள் ஓடின. என்றாலும், அந்தப் புன்னகை அவளுடைய சோகத்தின் ஆழத்தைத்தானே மேலே கொண்டு வந்தது? இருளடைந்த நெடுங்கிணற்றின் ஆழம், சூரியனின் நேரான கிரணங்களால் மேலே மிதப்பதுபோல இந்தப் புன்னகையில் அவள் துயரம் மேலே மிதந்தது.

சிவநாதனின் பரந்த மார்பு பொங்கி வடிந்தது. எண்ணற்ற ஊசிகள் முகத்தில் பாய்ந்தால் எத்தனை வேதனை அடைவானோ அத்தனை வேதனையுடன் “அரசி” என்று தடுமாறினான்.

அரசி பதிலளிக்கவில்லை. இரண்டு பெரிய முத்துக்கள் போன்ற நீர் மணிகள் அவள் கண்களில் தேங்கின.

சிலையோடு சிலையாய்ச் சிற்பி நின்றான். அரசியின் மௌனம் கலைந்தது.

“கலைஞரே, நீங்கள் ஏமாற்றப்பட்டிருக்கிறீர்கள்!” கலைஞன் திகைத்தான்.

“நான்...நானா?”

"ஆம், நீங்களுந்தான்; நானுந்தான்!"

மேலே அரசி வேகமாய்ப் பேசினாள்:

"நீங்கள் காதலுக்கு உரு அமைக்கவில்லை. ஏமாற்றப்பட்ட காதலுக்கு அமைக்கிறீர்கள்!—என்னுடைய ஏமாற்றம் எனக்குத் தெரியும்; உங்களுக்கு இன்னும் தெரியவில்லை. இதுவரை எனக்காக மட்டிலும் வருந்தினேன். சிலை தொடங்கிய பிறகு உங்களுக்காகவும் வருந்துகிறேன்."

அந்தத் தோட்டம் முழுவதுமே, சிற்பி அமைத்த சிலைபோல் ஆடாமல் அசையாமல் உயிரற்று விளங்கியது. கலைஞனே சிலையாய் நின்றான். அரசியும் அப்படியே ஆனாள்.

அரசியின் குரல் உயிர் பெற்றது.

"நீங்கள் புனிதக் காதலில் வாழ்ந்தவர்கள். இப்போது வாருங்கள், என்னுடன்; ஏமாற்றப்பட்ட காதலை உங்களுக்குக் காண்பிக்கிறேன்."

அரசி முன்னே நடந்தாள். மறுக்க முடியாத - கூடாத உத்தரவுக்குப் பணிபவன்போல் சிவநாதன் பின் தொடர்ந்தான். செடிகளையும் கொடிகளையும் வளைத்துக் கொண்டு அரசி எங்கோ புதர் நிறைந்த இடத்திற்குச் சென்று சந்தடி செய்யாமல் நின்றாள். சிவநாதனும் மந்திரத்தால் கட்டப்பட்டவன் போல் அங்கு நின்றான்; வேறு யாரும் அங்குத் தென்படவில்லை. சற்றுத் தொலைவில் இரு குரல்கள் மெதுவாக ஒலித்தன.

"அரசர்களே இப்படித்தான்! காதல் என்ற வார்த்தைக்கு அவர்களுக்கு அர்த்தமில்லை. இங்கே காதலைப் பற்றிக் கனியக் கனியப் பேசுகிறீர்கள். அங்கே உங்கள் அரசிக்கு உண்மைக் காதலின் பிம்பம் தயாராகிறது"—இது ஒரு பெண்ணின் குரல்.

"அரச குடும்பத்தின் கௌரவத்தைக் காப்பாற்ற அந்த ராஜகுமாரி அரசியானாள். நீ என்னையே காப்பாற்ற என் இருதய ராணி ஆனாய். அவள் அங்கே தன்னுடைய அழகையே கல்லில் கண்டு மகிழ்ந்து கொண்டிருக்கட்டுமே!"—இது அரசனின் குரல்.

அரசியின் விரல் சுட்டிக் காண்பித்த திசையில் சிவநாதன் கூர்ந்து நோக்கினான். கொடிகளாலும், கொடிகளின் மலர்க் கொத்துக்களாலும் சூழப்பெற்ற ஒரு சிறு கூடாரத்தில் இரு உருவங்கள் தென்பட்டன!

சூறாவளிபோல் அரசி திரும்பி வந்து தன் இருப்பிடத்தில் அமர்ந்தாள். சிவநாதன் உணர்விழந்தவனாய்த் தள்ளாடித் தள்ளாடிச் சிலை எதிரே வந்து நின்றான். அவன் கண்கள் அரசியையும் சிலையையும் மாறி மாறிப் பார்த்தன. சிற்றுளி பிடித்த கரம் நடுங்குவதை அரசி கண்டாள். அன்றைக்கு அதற்குமேல் அவனுக்கு வேலை ஓடாதென்று அவனிடம் விடைபெற்று அந்தப்புரம் சென்றாள்.

ஃ ஃ ஃ

மறுநாள் காலையில் வழக்கம்போல் அரசன் உல்லாசமாக அரசியை அழைத்துக்கொண்டு தோட்டத்துக்கு வந்தான். தினந்தோறும் முன்னரே வந்து காத்திருக்கும் சிற்பி இன்று இன்னமும் அங்கு வரவில்லை. அரசன் மின்னலால் தாக்குண்டவன் போல் சிலையின் முகத்தை நோக்கினான். அரசியும் அப்படியே வெறித்துப் பார்த்தாள். உலகத்தின் ஏக்கம், ஏமாற்றம், துன்பம், தொல்லை அத்தனையும் ஒன்றாய்த் திரண்டு வந்து அந்தச் சிலையின் முகத்தில் குடிகொண்டிருந்தது! இரண்டு நீர்மணிகள் சிலையின் கன்னங்களில் வழிந்து கொண்டிருந்தன! நீர் வழிந்த தாரைகூடப் பளிச்சென்னத் தெரியும்படி சிலை அமைத்திருந்தான்.

அரசன் சுற்று முற்றும் பார்த்தான். "அரசர் பெருமானுக்கு" என்று விலாசமிட்ட ஓர் ஓலைச் சுருள் அங்குக் கிடந்தது. அதில் "அரசே, தாங்கள் விரும்பியபடி தங்கள் காதலின் உருவத்தை — ஆம், ஏமாற்றப்பட்ட காதலின் உருவத்தை அமைத்து விட்டேன். நான் இப்போது இந்த ஊரில்—ஏன், தங்கள் நாட்டு எல்லைக்குள்ளேயே—இல்லை. என்றாவது மீண்டும் திரும்புவேன். அன்றாவது உண்மைக் காதலின் உயர்வைத் தாங்கள் அறிந்து கொண்டால் அதைக் கல்லிலும் காணுவீர்கள்" என்று எழுதியிருந்தது.

நடுங்கும் உள்ளத்தோடு அரசியைக் குற்றவாளி போல் மன்னன் கவனித்தான். சிலையில் தெறித்திருந்தவை போல் கண்ணீர்த் திவலைகள் அவளுடைய கன்னங்களிலும் தெறித்திருந்தன.

"உங்களுடைய நோக்கம் ஒன்றே ஒன்றுதான். விடுதலை! அந்த உன்னதமான லட்சியத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்து நீங்கள் முன்னேறுங்கள். யுத்தகளத்திலே பலம்பொருந்திய உங்கள் எதிரியின் பக்கம், அந்தத் துரோகி யின் படையில், உங்கள் அண்ணனே, தம்பியோ, நண்பனோ இருக்கலாம். அவன் இப்போது உங்கள் எதிரி!"

# ரத்தக் கலப்பு

## பர்மாவில்

**ரங்கூன் மொகல் தெருவில் தன்னுடைய அழகான சிறிய வீட்டில் இருந்துகொண்டு சீனிவாசன் திருச்சிராப் பள்ளியில் இருந்த தன் தம்பி பசுபதிக்கு — கீழ்க்கண்ட கடிதம் எழுதினர்:**

"அன்பார்ந்த பசுபதி,

பரீட்சைக்கு நன்றாகப் படித்து வருவதை அறிந்து சந்தோஷப்படுகிறேன். பி. ஏ, முடித்துவிட்டால் அப்புறம் உன் இஷ்டப்படி நீ மேலே விரும்புகிற துறையில் படிக்கலாம். செலவுக்காக யோசனை செய்யாதே—ஆனால் ஒன்று: ரங்கூனின் நிலைமை நாளுக்கு நாள் கவலைக்கிடமாகிக் கொண்டிருக்கிறது. எங்கும் ஒரே துருப்புகளின் நடமாட்டம்தான். எப்போது என்ன நடக்கும் என்று சொல்வதற்கில்லை. அடிக்கடி

உன் நினைவு வருகிறது. நானும் உன் மன்னியும் அங்குவர விரும்புகிறோம். அல்லது உன்னை இங்கு அழைத்துக் கொள்ள லாமா என்று தோன்றுகிறது.

திடீரென்று யுத்தம் தொடங்கிவிட்டால் கடிதப் போக்கு வரத்துக்கூட சாத்தியப்படாது. சமயத்திற்குத் தகுந்தாற்போல் நடந்துகொள். நாம் இருவரும் சீக்கிரம் ஒன்றுசேரும் காலம் வரப் பிரார்த்திக்கிறேன்.”

கடிதத்தை மனைவிக்குக் கொடுத்து படிக்கச்சொல்லி விட்டுக் கபாலுக்கு அனுப்பினார் சீனிவாசன். பிறகு நாற்காலியில் சாய்ந்தவாறே சிந்தனையில் ஆழ்ந்தார்.

பத்து வருடங்களுக்கு முன்பு அவரும் அவர் மனைவியும் இந்தியாவை விட்டுப் புறப்பட்டபோது பசுபதிக்கு வயது பதி னெட்டு. “அண்ணா! நானும் உன்னோடு ஊருக்கு வரேன்” என்று புறப்படுவதற்கு ஒரு மாதத்திற்கு முன்பிருந்தே பசுபதி பல்லவி பாடிக்கொண்டிருந்தான். சீனிவாசனுக்கும் அவனை அழைத்துச் செல்ல ஆவல்தான். ஆனால் தன்னைப் பிரிவதனால் அவருடைய பெற்றோர்களுக்கு ஏற்படும் சோகம், தன் தம்பி அங்கு இருப்பதால் ஒருவாறு மறையும் என்று நம்பினார். அவ ரும் பசுபதியும்தான் அவருடைய பெற்றோருக்கு. இருவரும் இரண்டு கண்கள். இரண்டையும் பிடுங்கிச் செல்ல விரும்பவில்லை சீனிவாசன்.

மன்னியிடம் பசுபதிக்கு அளவு கடந்த பிரியம். அவள் பசு பதியை மைத்துனனாக மட்டிலும் பாவிக்கவில்லை. சொந்தப் பிள்ளையாகவே நினைத்தாள். இன்று வரையில் அவளுக்கும் வேறு குழந்தைகள் கிடையாது. பசுபதிதான் எல்லாம்.

பம்பாய் புறப்படுகையில் பசுபதியின் தோளைப் பிடித்துக் கொண்டு, வழியும் கண்ணீரோடு “போய் வரேன் பசுபதி;

சமத்தா இரு; அம்மா அப்பா பேச்சைக் கேட்டு நட'' என்று தேம்பினள் மன்னி. பசுபதி அப்படியே அவளைக் கட்டிக்கொண்டு கதறிவிட்டான். தலையைக் கோதிவிட்டபடியே வெகு நேரம் அவனுக்கு ஆறுதல் கூறிவிட்டுக் கணவனும் மனைவியும் கிளம்பினர்கள்.

பசுபதி அதிகநாள் பெற்ருேரின் வளர்ப்பில் இல்லை. அவர்களும் அவனைக்கைவிட்டுவிட்டு என்றுமே திரும்பாத இடத்திற்குப் போய்விட்டார்கள். உறவினரொருவர் வீட்டில் அவன் வளர்ந்து வந்தான். வாரந்தவருது கடிதமும், மாதா மாதம் செலவுக்குப் பணமும் ரங்கூனிலிருந்து சீனிவாசன் அனுப்பிக்கொண்டிருந்தார். தவிரவும் சமீபத்தில்தான் அவரும் மனைவியும் திருச்சி வந்து சில மாதங்கள் தங்கிப் போனர்கள்.

## இந்தியாவில்

திருச்சிராப்பள்ளியில் தன்னுடைய மாடி அறையில் நின்று ஜன்னல் வழியாக வானத்தை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தான் பசுபதி. அவனுடைய கையில் அவன் அண்ணு கடைசியாக எழுதிய கடிதம் இருந்தது. அதற்கு அவன் உடனே பதில் அனுப்பினன். அது போய்ச் சேர்ந்ததோ என்னவோ தெரியாது. அதற்கப்புறம் அங்கிருந்து ஒன்றும் தகவல் இல்லை. பத்திரிகைகளில் மட்டும் தினந்தோறும் பயங்கரமான செய்திகள் வந்துகொண்டிருந்தன.

"ரங்கூனில் குண்டுவீச்சு!''

"ரங்கூன் விழுந்துவிட்டது!''

"பர்மாவில் இந்திய அகதிகள் படும் துயரம்...''

இப்படியாகச் செய்திகள் வந்து கொண்டிருந்தன. கப்பல் போக்குவரத்து அறவே நின்றுவிட்டது. கால் நடையாக இந்

தியா நோக்கிப் புறப்பட்டவர்களின் கதையைக் கேட்கச் சகிக்கவில்லை. வழியெங்கும் பகற் கொள்ளை; கொலை; அக்கிரமம்! எங்கும் பிணக்காடு; சாவின் தாண்டவம்; இறந்துகொண்டிருந்தவர்களின் இறுதிக் குரல்கள்!

இந்த மாதிரிக் கோரமான நிலையில் சீனிவாசன் கதி என்ன? அவர் மனைவி?

பசுபதியின் நெஞ்சு படபடத்தது. கையில் வைத்திருந்த கடிதத்தை கண்ணீரைத் துடைத்துக்கொண்டு படித்தான். அதில் உள்ள இரண்டு வரிகள்தாம் எத்தனை பெரியதாகி மேலே எழும்புகின்றன! அவை எழுத்துக்களல்ல. அவன் அண்ணாவே வாய் திறந்து பேசுகிறார்:

"அடிக்கடி உன் நினைவு வருகிறது. நானும் உன் மன்னியும் அங்கு வர விரும்புகிறோம். அல்லது உன்னை இங்கு அழைத்துக் கொள்ளலாமா என்று தோன்றுகிறது...நாம் இருவரும் ஒன்று சேரும் காலம்வரப் பிரார்த்திக்கிறேன்."

பசுபதிக்கு நிலைகொள்ளவில்லை. நினைத்துப் பார்த்தான்.

"கடல் கடந்த அந்த பிரதேசத்தில் இந்தக் கலவர நிலையில் அவர்கள் என்னவாயிருப்பார்கள்? என்னைக் காணக் கால் நடையாகப் புறப்பட்டிருப்பார்களா? இல்லை குண்டுவீச்சிலோ, கொள்ளை, கொலையிலோ அகப்பட்டு...அண்ணா! மன்னி!"

பயங்கரமும், குழப்பமுமான பல நினைவுகளுக்குப் பிறகு பசுபதி தீர்மானமாக ஒரு முடிவுக்கு வந்தான். உடை மாற்றிக் கொண்டு நேரே யுத்தத்திற்கு ஆள் எடுக்கும் ரெக்ரூட்டிங் ஆபீசுக்குப் புறப்பட்டான். வழியில் அவனுடைய கலாசாலையின் வெண்மையான வெளிச் சுவற்றில் அவன் ஒரு நாள் பெரியதாகக் கருப்பு மையினால் எழுதிய எழுத்துக்கள் மின்னின.

"பட்டாளத்தில் ஒருவரும் சேரவேண்டாம். இது வல்லரசு களின் பேராசையால் ஏற்பட்டிருக்கிற யுத்தம். இதில் இந்தியா வுக்குப் பங்குகிடையாது."

ஒரு கணம் அங்கு தங்கினன். பெருமூச்சு சீறி வந்தது. எந்தக் கையினல் அந்த வாக்கியங்களைக் கடவுளின் கட்டளை என்று நம்பி எழுதினனே, அதே கையினல் இன்று பட்டாளத் தில் சேர மனு எழுதப் போகிருன்!

'என்னை அடிமையாக்கி விருப்பவர்களின் வெற்றிக்காக நான் போராடப் போகவில்லை; வயிற்றைக் கழுவவும் அல்ல: பர்மாவுக்குப் போகவேண்டும்! ரங்கூனுக்குச் சென்று அவர்களைத் தேடவேண்டும்! வீண் முயற்சியாகத் தோன்றலாம்; பரவா யில்லை......வெற்றி, தோல்வி, சாவு, நீதி, நியாயம், அறிவு இவற் றிற்கு என்னிடம் இடமில்லை. பாசம்! ரத்தம் ரத்தத்தை அழைக் கிறது! அதற்காக அதன்வழியே செல்கிறேன்!'

பட்டாளத்திலே சேர்ந்தான். மேல் உத்தியோகஸ்தர்களிடம் நல்ல பெயரும் எடுத்தான்; பர்மா முனைக்குப் போகும் துருப்பு களின் முதல்வன் ஆனன்.

ஜப்பானியர் ரங்கூனைக் கைப்பற்றிய சமயத்தில் அங்கே அராஜகம் தலைவிரித்தாடியது. அங்கு வசித்த இந்தியர்களது உயி ரையும் சொத்து சுகங்களையும் காப்பாற்றுவார் ஒருவருமில்லை. கொள்ளைக்காரர்கள் பட்டப்பகலில் வீடு புகுந்து சூறையாடினர் எங்கும் ஒரே கூச்சல், குழப்பம், ஓலம்! வெள்ளைக்காரர்கள் மட்டும் ஜப்பானியரின் படையெடுப்புக்கு நாலு நாளைக்கு முன்பே வெகு ஜாக்கிரதையாக அங்கிருந்து மூட்டை கட்டிவிட்டார்கள்!

## பர்மாவில்

நல்லவேளை; இந்தத் தொல்லைகள் நீண்ட நாட்கள் நிலைக்க வில்லை. தியாக புருஷன் சுபாஷின் தலைமையில் சுதந்திர இந்திய

சர்க்கார் உதயமாகிப் பலம் பெற்று வந்தது. தினந்தோறும் நூற்றுக் கணக்கான இந்தியர்கள் அந்த சர்க்காரின் பட்டாளத்தில் மகிழ்வோடு சேர்ந்தார்கள். பலம் பெருகி வரும் ஓர் இயக்கத்தில் ஒன்றுபட்ட மக்களுக்கு அப்புறம் என்ன கவலை?

வெளி நாடுகளில் தங்களைப்பாதுகாத்துக்கொள்வது மாத்திரம் அவர்களது வேலையல்லவே! இரு நூற்றாண்டுகளாக அடிமைப் பட்டுக் கிடக்கும் தங்கள் மகத்தான பெரிய தேசத்தை காக்க வல்லவோ அவர்கள் கிளம்பிவிட்டார்கள்! தேச பக்தி பொங்கும் கடலாகி அங்கே அலை எறிந்தது. ஆண், பெண், பாலர் ஒவ்வொருவரும் கண்களில் கனல் பறக்க “செல்வோம் டெல்லியை நோக்கி; அடிமைத்தளையை அறுத்தெறிந்து, சுதந்திரத் தாய்க்கு தலைவணங்குவோம்!” என கர்ஜித்து மார்தட்டினார்.

இந்தியாவின் எல்லையை நோக்கி இந்திய சுதந்திரப் பட்டாளத்தை அனுப்பு முன்பு, நேதாஜி சுபாஷ், சேனை வீரர்களுக்குச் சில வார்த்தைகள் கூறினார். அந்த வார்த்தைகள் அவர்களை மயிர்க்கூச்செறியச் செய்தன. ஆர்வத்தோடும், பெருமிதத்தோடும், அவர்கள் யுத்தகளத்திற்குச் சென்றனர். சுபாஷ் கூறிய வாக்கியங்கள் அவர்களது செவிகளில் இடைவிடாமல் ஒலித்துக் கொண்டே இருந்தன.

“உங்களுடைய நோக்கம் ஒன்றே ஒன்றுதான். விடுதலை! அந்த உன்னதமான லட்சியத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்து நீங்கள் முன்னேறுங்கள். யுத்தகளத்திலே பலம் பொருந்திய உங்கள் எதிரியின் ஒவ்வொரு சொட்டு இரத்தத்தையும் வற்ற வைத்துத்தான் நீங்கள் முன்னேற வேண்டியிருக்கும். அந்தத் துரோகியின் படையில் உங்கள் அண்ணனோ, தம்பியோ, நண்பனோ இருக்கலாம். அவன் இப்போது உங்கள் எதிரி. உங்கள் நாட்டை அடிமையில் ஆழ்த்த உதவும் ஓர் யந்திரம். ஆகையால் நீங்கள் உங்கள் கடமையில் கவனமாயிருக்கவேண்டும்!”

இந்த வார்த்தைகள் அந்தப் படையில் வேகமாக அடி போட்டு நடந்துவரும் ஒரு மனிதருக்கு மட்டும் மலைகள் மோதுவது போல் கிறுகிறுத்தன. அவர் வேறு யாருமில்லை; சீனிவாசன்! அவருக்கு இப்போது அவர் மனைவியைப்பற்றிக் கவலை இல்லை. பெண்கள் சேனையில் சேர்ந்து அன்னையின் விடுதலைக்காக அவள் எந்தக் கடுமையான பணியைச் செய்து கொண்டிருக்கிறளோ!—தம்பி மட்டும் தான். அவனைப் பற்றித்தான் எண்ணமெல்லாம்.

'தம்பி! உன் நினைவை இப்போது ஏன் நேதாஜி எனக்குக் கிளப்பிவிட்டார்? 'அண்ணனயிருந்தாலும், தம்பியா யிருந்தாலும்' என அவர் சொன்னதிலிருந்து ஏன் என்னுள் இத்தனை கலக்கம்? நீ எங்கே? நான் எங்கே? சாவை நோக்கி நடக்கும் இந்த வேளையில் உன் நினைவு ஏன் என்னை விடாப்பிடியாய் பற்றிக்கொள்கிறது. சே!—இல்லை, இல்லை; தேசம்! தேசம்!—விடுதலை வெறியில் செல்லும்போது அண்ணனுமில்லை; தம்பியு மில்லை!'

## இந்தியாவும், பர்மாவும் கூடுமிடத்தில்

உதய காலத்திலே சுதந்திர சேனை வீரர்கள் தனித் தனியாகப் பிரிந்து புதர்களுக்குள்ளும், சிறு சிறு குன்றுகளுக்குப் பின்புறமும் ஒளிந்து கொண்டார்கள். அந்த வழியாகத்தான் எதிரியின் படை வருவதாக ஏற்பாடு. இதை ஒற்றர்கள் மூலம் அறிந்து சரியான சமயத்தில் தாக்குவதற்காகத் தயாராய் இருந்தார்கள். ஒவ்வொரு கணமும் அந்தக் காட்டில் எதிரிப் படையின் காலோசையைக் கேட்க எண்ணற்ற செவிகள் கூர்மையாகி யிருந்தன....

நிலந்தெளியும் நேரத்தில் அவர்கள் எதிர்பார்த்த விருந்து அவர்களை எதிர்நோக்கி வந்து கொண்டிருந்தது. பூட்ஸ்களின்

ஓசையும், அதிரும் தரையும் மறைந்திருந்த சுதந்திர வீரர்களின் இதயங்களைக் கூடவே அதிரச் செய்தன.

விசில் ஓசை!

புலிகளாய்ப் பாய்ந்தனர் சுதந்திர வீரர்கள். ஒரு நொடியில் பெருங் குழப்பம். துப்பாக்கிகள் படபடத்தன. ரத்தம் பெருக் கெடுத்தது. ‘ஜெய்ஹிந்த்!’ கோஷம் அந்தப் பிராந்தியம் பூராவும் பரவிற்று.

சீனிவாசனின் இடது கரத்தில் ஒருவனுடைய குரல் வளை அகப்பட்டு நெறித்துக்கொண்டிருந்தது. கண்களை அகலத் திறந்து பார்த்தார்; அந்த மனிதனும் பார்த்துவிட்டான். ஆ! அவரு டைய வலது கரம் சற்று நடுங்கிற்று. நேதாஜீ! தெய்வ மனிதா! இது என்ன கடுஞ் சோதனை? நடுங்கின அவரது கரம் தடுமாற வில்லை. கண்களை இறுக மூடிக்கொண்டு “நீ தம்பி இல்லை; எதிரி!” என்று உரக்கப் பிதற்றியபடியே கத்தியை அவன் நெஞ்சில் பாய்ச்சினார். இரத்தம் பீறிட்டது.

•

அவன் கீழே விழுந்தான். சும்மா விழவில்லை. “அண்ணா!...... உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்......பார்த்துவிட்டேன்...... வந்தே மாதரம்” என்று கத்திக் கொண்டே மண்ணில் சாய்ந்தான்.

கடமையைச் சீனிவாசன் செய்துவிட்டார்!—இல்லை; அப்படி யானால் ஏன் கீழே சுருண்டு விழுந்த பசுபதியை அப்படி உற்றுப் பார்க்கிறார்? ஏன் அவர் உடல் பதறுகிறது? ஏன் அவர் தன் னைக் காத்துக் கொள்ளவோ மற்றொரு எதிரியைத் தாக்கவோ முயலவில்லை? சகோதர இரத்தம் வெளியே வந்து அவரைக் கூவி அழைக்கிறதா?

“த...ம்...பி!” எனத் தலையை நிமிர்த்தினார்.

அந்த நிமிஷத்திலே, அந்த பயங்கரப் படுகளத்திலே அது என்ன சத்தம்? சாவின் பேய்ச் சிரிப்பா?

"டும், டும், டுமீல்...!"

சீனிவாசன் மார்பிலே ஒரு குண்டு!

"தம்பி, நானும் வர்ரேண்டா உன்னோடு!... ஜே-ஹிந்த்!"

இந்தியாவும் பர்மாவும் ஒன்று கூடும் எல்லைக் கோட்டிலே இரண்டு சகோதரர்கள் ஒன்றாய்க் கிடந்தார்கள். இத்தனை நாளாய்ப் பிரிவின் ஏக்கத்தால் துக்கப்பட்டுக் கொண்டிருந்த அவர்களின் இரத்தம் இன்று மகிழ்வோடு ஒன்றாய்க் கலந்தது. அந்த ஒன்றுபட்ட இரத்தம் புழுதி மண்ணிலே வழிந்தோடி எழுதின எழுத்து என்ன தெரியுமா?—ஜே-ஹிந்த்!

●

கன்னத்தில் ஒன்று விழுந்ததம்மா—பொல்லாக்
காதலோ காதல் பிறந்ததம்மா!
மென்மையான என்றன் உள்ளத்திலே—அது
மொட்டாய்ப் பிறந்து மலர்ந்ததம்மா!

*கண்ணம்மாவுக்குக் காதல் கொடுத்த கவிதை அது. சாமிநாதன் கொடுத்த அறைக்குப் பதிலாக அவளும் ஒன்று அவன் கன்னத்திலே கொடுத்தாள். அறை அல்ல அது....!*

# காதல் பிறந்த கதை

இன்பகரமான நினைவுகளில் மனத்தை மிதக்க விட்டவாறே சாமிநாதன் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தான். காவேரியின் அமைதியான வெள்ளத்தில், மாலையின் மஞ்சள் ஒளி திகழ, ஆடி ஆடி ஊர்ந்து செல்லும் வண்ணப் படகுபோல் அவன் மனம் கம்பீரமாய்ப் பழைய சம்பவங்களின் மீது உல்லாச யாத்திரை செய்து கொண்டிருந்தது. பழைய சம்பவங்கள் என்றால், வருடங்களையோ அல்லது மாதங்களையோ கடந்த சம்பவங்கள் அல்ல. ஒரு வாரத்திற்கு முன்பிருந்து அன்று மத்தியானம் வரை நடந்த சம்பவங்கள்.

முதல் நாள்......

"சித்தி, இதோ பால்!"

கிண்கிணி நாதம் போன்ற இந்தக் குரலைக் கேட்டு அறைக் குள் தன் அலங்காரத்தில் ஈடுபட்டிருந்த சாமிநாதன் சீப்பும் கையு

மாய் வெளியே தலையை நீட்டிப் பார்த்தான். ஒரு கணம் அவன் நின்றிருந்த தரை மேலே எழும்பி வட்டமிட்டு மீண்டும் அந்த இடத்திற்கு வந்தது போலிருந்தது. தன் பார்வையையும் முகத்தையும் கஷ்டப்பட்டு அறைக்குள் இழுத்துக் கொண்டான். ஏனோ கண்ணாடியின் முன்பு மறுபடியும் சென்று தன் அழகை அதில் மீண்டும் பார்த்துக்கொள்ள வேண்டும் எனத் தோன்றியது அவனுக்கு!

அவனை இந்தக் கதிக்கு ஆளாக்கிய சுந்தரதேவதை வாசற்படியருகில் முன் போலவே நின்று கொண்டிருந்தாள். கூண்டுக்குள்ளிருந்து வெளியே தலையை நீட்டும் சர்க்கஸ் பிராணியைப் பார்ப்பதுபோல் அவனைப் பார்த்தாள். கையில் டம்ளரிலிருந்த பாலைக் கீழே டக்கென்று வைத்துவிட்டு "டே அம்பி, சிந்தி இல்லாட்டா நீ வந்து வாங்கறதுதானேடா! எனக்கு நாழியாச்சு; இந்தா எடுத்துண்டு டம்ளரைக் கொடு; கோயிலுக்குப் போகணும்" என்று அதிகாரத்தோடு கத்தினாள்.

"ஏது, பொல்லாத பெண்ணாயிருப்பாள் போலிருக்கே?" என்று நினைத்துக்கொண்டு முகத்தை ஒருதரம் நன்றாக அழுத்தித் துடைத்தபடியே இரண்டாவது தடவையாக வெளியே எட்டிப் பார்த்தான். 'அம்பிப் பயலும் வராதிருந்தால் தேவலையே' என்று வேண்டியது அவன் மனம். அவள் இன்னொருமுறை சத்தம் போடுவதைக் கேட்கலாமல்லவா? தானே சென்று பாலை வாங்கி வைக்கும் பாக்கியம் கிடைக்குமல்லவா?

அந்தப் பாக்கியம் அவனுக்கு அப்போது கிடைக்கவில்லை. ரெயில் மாதிரி ஊதிக்கொண்டே அம்பிப்பயல் பத்து மைல் வேகத்தில் சிட்டாய்ப் பறந்துவந்து நின்றுவிட்டான். சாமிநாதன் மறுபடியும் ஆமைபோல் தலையை உள்ளுக்கு இழுத்துக்கொள்ள வேண்டியதாய்ப் போயிற்று.

அவ்வளவு அவசரத்திலும் அவளுக்கு அம்பிப்பயலிடம் விசாரணை செய்யாமல் போக முடியவில்லை.

"இது யாருடா, இங்கே புதிசா வந்திருக்காரே?"

"உனக்குத் தெரியாதா? இவர்தான் சின்னமாமா! கோட்டை மாமா! அங்கேருந்து வந்திருக்கார்"

"சித்தியோட தம்பியா? காலேஜிலே படிக்கிறதாச் சொன்னையே?"

"ஆமாம் அவர்தான்"

"லீவிலே வந்திருக்காரா?"

அம்பி இதற்குப் பதில் சொல்லவில்லை.

"கோவிலுக்குப் போகணும்னு அவசரப்பட்டியே, இரு; இதைக் கொண்டுபோய் வச்சுட்டு நானும் வந்துடறேன்" என்றாள்.

உள்ளே இருந்த சாமிநாதன் காதைக் கூர்மையாக்கி இவ்வளவையும் கேட்டுக் கொண்டிருந்தான். பேச்சில் இந்தக்கட்டம் வந்தபோது "இருடா அம்பி, நீ என்னோட கோவிலுக்குப் போகலாம். நானும் வர்றேன்" என்றான்.

கண்ணம்மா — அவள்தான் நாஸ்திகவேதம் படித்துக் கொண்டிருந்த சாமிநாதனை மின்னல்வேகத்தில் 'பக்த'னாய் மாற்றிய அந்த சுந்தர தேவதை விர்ரென்று வெறும் டம்ளருடன் புறப்பட்டாள். சாமிநாதன் வெளியே வந்து அவள் சென்ற திக்கைக் கவனித்தான். வேறு எங்கும் அதிக தூரம் அவள் போகவில்லை. நேரே சென்று எதிர் வீட்டிற்குள் நுழைந்தாள்.

அன்று கோயிலில் அவன் சாமி கும்பிடுவதில் எவ்வளவு நேரம் கவனம் செலுத்தியிருப்பானென்பது அவனுக்கும், அந்தச் சாமிக்கும்தான் தெரியும்.

## 2

இரண்டாவது நாள், மூன்றாவது நாள் இப்படி அடுத்த நாட்கள் சென்றன. ஒவ்வொருநாளும் கண்ணம்மா ஒரு நாழிகையாவது அந்த வீட்டில் தோன்றி ஓராயிரம் எண்ணங்களைச் சாமிநாதன் உள்ளத்தில் கிளறி விட்டுச் செல்வாள். கண்ணம்மா இப்போது சாமிநாதனுக்கு வெகு அருகில் வந்துவிட்டாள். அவனுடன் கலகலப்பாகப் பேசினாள், சிரித்தாள்; அவனைப் பரிகசித்தாள். சமயம் வந்தபோது அவனையே அதட்டி அதிகாரம் பண்ணக் கூடச் செய்தாள்!

முதல் இரு தினங்களிலும் சாமிநாதனுக்கு உலகமே இன்ப வெறியில் குதித்தது. இத்தனை அழகான ஒரு பெண், வயது வந்த ஒருத்தி, குறுகுறுப்பான கண்களால் அடிக்கடி அவனைப் பார்த்தாள். சங்கோசமில்லாமல் அவனோடு பழகினாள். அவனுக்குத் தெரியாததையெல்லாம் சொல்லி அவன் விழிப்பதைக் கண்டு கைகொட்டி நகைத்தாள். இதைவிடப் பேரின்பம் ஒன்று இவ்வளவு எளிதில் அவனுக்கு எங்கே கிடைக்கப் போகிறது!

மூன்றாவது நாள் சாமிநாதன் அவளோடு உற்சாகமாய்ப் பேசவில்லை. பதிலுக்கு ஏக்கத்தோடு அவளையே உற்று உற்றுப் பார்த்துக் கண்களைத் திருப்பிக்கொண்டான். பெருமூச்சுக்கள் அடிக்கடி வெளிவந்தன. ஆனால் அவை எந்த விதத்திலும் கண்ணம்மாவைப் பாதித்ததாகத் தெரியவில்லை.

சாமிநாதன் கனவு கண்ட கண்ணம்மா எங்கே? இந்தக் குறும்புக்காரி—புரியாத பெண் எங்கே?

அவனுடைய கனவுப் பெண் அவனுக்கு வெகு தொலைவில் இருந்தாள். அந்தக் கண்ணம்மா வீட்டை விட்டு இங்கே ஓடி வருவதில்லை! இந்த அம்பியுடன் சேர்ந்துகொண்டு விஷமம் செய்து 'மாமா'வை வம்புக்கிழுப்பதில்லை. அவள் அந்த எதிர்

வீட்டுள் ஜன்னலின் பின்னிருந்தே கண்களால் பேசினாள், நெஞ்சினால் பேசினாள், மொழியற்ற மெல்லிய உடல் அசைவுகளினால் பேசினாள். அவர்களுக்கு மத்தியில் வெளி உலகில்தான் சற்று தூரமிருந்ததே தவிர உள்ளத்தில் அப்படி இல்லை. அவள் அவனது இதய ராணியாய் ஆட்சிபுரிந்தாள், எல்லாம் வெறுங்கனவு!

ஆனால் உண்மைக் கண்ணம்மா?—இவளைப்பற்றி நினைக்கும் போதுதான் சாமிநாதனுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. இத்தனை அருகாய் இருக்கிறாள்; மாசற்ற அன்பைப் பரிபூரணமாய்ச் சொரிந்து 'மாமா' என்றழைக்கிறாள்; அவளுடைய சுவாசம் அவன்மேல் படும்படி அத்தனை சமீபமாய் இருக்கிறாள். இருந்தும் அவன் உள்ளத்திற்கும் அவள் நெஞ்சிற்கும் எட்டாத தூரம் இடைவெளி கிடக்கிறதே!

என்னதான் முயற்சி செய்தும் அவனால் இந்தப் பட்டிக் காட்டுப் பெண்ணின் காதலைப் பெற முடியவில்லை. அவனும் கல்லூரியில் மாணவிகளுடன் படித்திருக்கிறான். அவர்களுடைய சுபாவத்தை ஓரளவு அறிந்திருக்கிறான். கண்களும், கடிதங்களும், நாவல்களும் இவன் விஷயத்தில் நினைக்கவே முடியாத காதற் சாதனங்களாகி விட்டனவே!

தனியே இருக்கையில் ஒரு சமயம் சாமிநாதன் "கண்ணம்மா" என்று தடுமாறினான். அவன் கண்கள் எதையோ கெஞ்சுவதுபோல் விழித்தன.

"ஏன் மாமா?" என்றாள் கண்ணம்மா.

அடுத்த வார்த்தை என்ன சொல்வதென்று அவனுக்குப் புரியவில்லை. "ஒன்றுமில்லை" என்றான்.

ஆச்சரியத்தோடு அவனைப் பார்த்தாள் கண்ணம்மா. "ஒன்றுமில்லாட்டா எதுக்காகக் கூப்பிடணுமாம்!" என்றாள் துடுக்காக.

சாமிநாதனின் மனம் இதைக்கேட்டு 'புரியாத பெண்' என்று தனக்குள் முனகிக்கொண்டது. அந்த முனகலை உண்மையாக்குவதைப் போலவே அன்று மாலையும் அவள் அப்படி நடந்துகொண்டாள்.

பொழுது போகவில்லை என்பதற்காகத் தோட்டத்தில் மல்லிகைப் பதிகத்திற்குப் பக்கத்தில் கொத்திக் கொண்டிருந்தான் சாமிநாதன். அரைமணி நேரம் கழித்த பிறகு வேர்வையைத் துடைத்துக்கொண்டு தோட்டத்தை அடுத்த கைப்பிடிச் சுவர்ப் பக்கம் திரும்பினான். அங்கே மலர்ந்த கண்களோடு நின்றுகொண்டிருந்தாள் கண்ணம்மா! எத்தனை நிமிஷங்கள் இப்படி வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்றாளோ?

"படிச்சவாளுக்கெல்லாம் பட்டணத்திலே வேலையா கிடைக்கிறது? அதனாலேதான், மாமா தோட்டவேலை பழகறார். மண்வெட்டியாவது எடுத்து......!" என்று பக்கத்தில் நின்ற அம்பியிடம் சொல்லிக் கொல்லென்று சிரித்தாள்.

"அதுக்காக இல்லே; கண்ணம்மாவுக்குப் பூ வேணுமோல்லியோ? அதுக்காக மல்லிகையைச் சரி பார்க்கிறேன்" என்றான் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு சாமிநாதன்.

கண்ணம்மா உடனே பதிலளிக்கவில்லை; அவளால் பதில் சொல்லவும் முடியவில்லை. இந்த நிலைமையை உபயோகித்துக் கொண்டு சாமிநாதன் அவசர அவசரமாக அப்போதுமலரவிருந்த பூக்களைக் கை நிறையப் பறித்துக்கொண்டு அவளருகில் வந்தான்.

"ஊஹூம், எனக்கு வேண்டாம்!"

"ஏன் வேண்டாம்?"

அவள் கையை இழுத்து அதிலே கொட்டினான் மலர்களை. அவள் அதைப் பெற்றுக்கொள்ளவில்லை. மலர்கள் கீழே விழுந்து மண்ணில் புரண்டன.

ஒரு கணம் இமைக்கும் பூனையையும் அவளையும் பார்த்தான். நெஞ்சு கோபத்தால் துடிதுடித்தது. முகம் இரத்த ஓட்டத்தால் சிவந்தது. பழைய ஏக்கம், பழைய ஏமாற்றம், பழைய தோல்வி எல்லாம் புத்துருப்பெற்றன. அடக்கமுடியாத ஆத்திரத்தில் அவள் கன்னத்தில் ஓங்கி ஒரு அறைவிட்டான்!

அதற்குப் பிறகு என்ன நடந்ததென்று அவனுக்குத் தெரியாது. எப்படியோ சத்தமிட்டுக்கொண்டு அவள் ஓடியிருப்பாள் என்று அவன் கற்பனை செய்யவும் இல்லை. ஆனால் ஒன்று; அந்த விரல்களும் அவள் மெல்லிய பூங்கன்னத்தில் நிச்சயம் பதிந்திருக்கும். அத்தனை முரட்டுத்தனமான அறை அது!

## 3

தன் நினைவைத் திரும்பவும் அடைந்த சாமிநாதன் தலையை இருகரங்களுக்குள்ளும் கவிழ்த்துக் கொண்டு பைத்தியம் பிடித்த மாதிரி தரையில் உட்கார்ந்தான். அவளை அடித்த கை லேசாக வலித்துக்கொண்டிருந்தது. அவளுக்கு எப்படியிருக்கும்? நினைக்கவே பயமாயிருந்தது. அவளிடம் ஏன் இம்மாதிரி நடந்துகொண்டான்? அல்லது இப்படி நடந்துகொள்ள என்ன உரிமையிருக்கிறது? காதல் என்பது கட்டாயப்படுத்திப் பெற்றுக் கொள்ளக் கூடிய ஒன்றா? ஐயோ! எத்தனை குறும்புக்காரியாயிருந்தாலும், அவனிடம் எவ்வளவு பிரியத்தோடு நடந்து கொண்டாள். ஒவ்வொரு கணமும் பாசமிக்க அன்பை அவன்மீது அள்ளிச் சொரிந்தாளே? அந்த அன்பில் அவன் விரும்பிய ஒன்று இல்லை என்பதற்காக அவளுக்கு இந்தத் தண்டனையா?

இப்படியே எண்ணித் தடுமாறினான். இந்த நினைவுகள் ஓயும் சமயம் சாமிநாதனை வேறொரு பயம் வந்து கவ்விக்கொண்டது. அது கேவலப்பட்ட பயமல்ல; அவன் உயிரைவிடப் பெரிய, அவன் சுய கௌரவத்தையே பாதிக்கக்கூடிய பயம்.

இந்த நேரத்தில் கண்ணம்மாவின் வீட்டில் எல்லா விஷயமும் தெரிந்திருக்கும். அப்பாவையோ, அம்மாவையோ, வீடு முழுவதையுமோ அழைத்துக்கொண்டு வந்து விடுவாள். எதற்காக இந்த அறை என்று கேட்பார்கள். மல்லிகையைப் பெற்றுக் கொள்ளாததற்காக! நல்ல காரணம்! அவள் ஏன் பெற்றுக்கொள்ள வேண்டும்? அதை மறுத்தால் ஏன் அவன் அடிக்கவேண்டும்? இதோ கன்னத்தில் வரியிட்டிருக்கும் ஐந்து விரல்களின் அடையாளத்திற்கு அவன் பதில் என்ன? ஐயோ, என் செய்வது? நமக்கை வீட்டிற்கு வந்த இடத்தில் அனைவரின் முன்னும் இந்த அவமானமா?

சாமிநாதன் யோசனையிலிருந்து அவசர அவசரமாய் எழுந்தான். இன்னும் கால்மணி நேரத்தில் அந்த ஊரைவிட்டுத் திருச்சிக்கு ஒரு ரெயில் புறப்படுகிறது. வேண்டியதெல்லாம் ஒரு சட்டை, ஒரு துண்டு, கொஞ்சம் பணம். முகம் கழுவிக்கொண்டு எல்லாம் சேகரித்தான். ஒரு சிறு காகிதத் துண்டில் தான் அவசரமாகத் திருச்சி புறப்படுவதாக எழுதித் நமக்கை புருஷனின் மேஜைமீது வைத்தான். யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் அந்த அந்திமங்கல் நேரத்தில் வெளிக் கிளம்பினான்.

எதிர் வீட்டருகில் சென்றவுடன் கொஞ்சம் தயக்கம். சற்று நேரத்திற்கு முன்பிருந்தே அங்கே எரிமலை வெடித்துக் குமுறிக் கொண்டிருக்கும் என்று அவன் கற்பனை ... என்ன! அவள் அழுக்காரேனும்! அவள் தாயோ, தந்தையோ அவளைச் சமாதானப் படுத்தக் காணேம்! கோபமான வார்த்தைகள், கூட்டங்கள், சத்தங்கள் ஒன்றுமே இல்லை!

பதிலுக்கு ஒரு இசை கேட்டது. ஆமாம், இன்னிசை! திண்ணைக் கட்டிலில் உட்கார்ந்து கொண்டே காலை ஒய்யாரமாக ஆட்டிக்கொண்டு கண்ணம்மா மெதுவாகத் தனக்குள் பாடிக்கொண்டிருந்தாள். இதைச் சாமிநாதன் கனவாகக் காணவில்லை! உண்மையிலேயே அங்கு நடந்தது அதுதான்.

அவள் பாடினாள்:

கன்னத்தில் ஒன்று விழுந்ததம்மா - பொல்லாக்
காதலோ காதல் பிறந்ததம்மா !
மென்மையான என்ற னுள்ளத்திலே - அது
மொட்டாய்ப் பிறந்து மலர்ந்ததம்மா !
ஓங்கிவிழுந்த ஒரு அறைதான் - அது
உள்ளத்துத் தென்றலாய் வீசுதம்மா !
தூங்கி விழுந்திட்ட என்னையது - இன்று
தூங்காதே என்று எழுப்புதம்மா !
கன்னத்தில் இன்னும் வலியுளதே - ஆனல்
கற்கண்டு போலது தித்திக்குதே !
இன்னும் இன்னும் அறை வேண்டுமென்றே - இங்கே
என்னுளம் நாடுது ஏக்கத்திலே !

கண்ணம்மாவுக்குக் காதல் கொடுத்த கவிதை அது! அதை அப்படியே மெய்மறந்து ரசித்துப் பித்தனாய் வீடு திரும்பினான் சாமிநாதன்.

ஃ ஃ ஃ

ஒரு வருடம் கழித்து அவர்களுக்குக் காதற் கல்யாணம் நடந்தது. கண்ணம்மா அப்போது சாமிநாதன் கொடுத்த அறைக்குப் பதிலாக அவன் கன்னத்திலே ஒன்று கொடுத்தாள். ஆனல் அது அறையல்ல; வேறொன்று!

# அகிலனின் வேறு நூல்கள்

**அவளுக்கு** (நாவல்) ரூ. 1—0—0

அகிலன், செல்வம், சோணு, ஆர்வி ஆகிய நான்கு ஆசிரியர்கள் எழுதிய புதுமுறைக் கடித நாவல். தமிழ்நாட்டு வாசகர்களிடையே பெரும் பரபரப்பை ஏற்படுத்திய உணர்ச்சி நிறைந்த நவீனம்.

**சாந்தி** (கதைகள்) ரூ. 1—0—0

இக் கதைத் தொகுதி அகிலனின் அற்புத சிருஷ்டி. அனைத்தும் பொறுக்கு மணிகள். புத்தகத்தைக் கையில் எடுத்தால் படித்து முடித்துவிட்டுத்தான் கீழே வைக்க மனம் ஓடுகிறது.

**ஆண்-பெண்** (கதைகள்) ரூ. 1—8—0

நல்ல இலக்கிய முயற்சி. கவிதைப் பண்புடன், கற்பனைச் செழிப்பில் வார்க்கப்பட்ட, ரசிக்கத்தக்க கதைகள். பலமுறை படிக்கவேண்டிய உளநூலிது.

**சிநேகிதி** (நாவல்) சாதா பதிப்பு ரூ. 2—8—0
உயர்ந்த பதிப்பு ரூ. 3—0—0

அகிலன் இதுவரை எழுதிய நூல்களுள் மிகவும் சிறந்தது இது. அன்பு காதலாக மாறுவதை அழகாக வர்ணிக்கிறது. அனைவரும் வாங்கிப்படிக்க வேண்டிய அமர சிருஷ்டி; தமிழில் துணிகரமான முயற்சியும் கூட.

**நெஞ்சின் அலைகள்** (நாவல்) ரூ. 4—0—0

மனமொத்த காதலைப் பிணித்து உள்ளங்கவரும் வகையில் எழுதப்பட்டுள்ள ஆரம்பமுதல் இறுதிவரை விறுவிறுப்புக்குக் குறைவே இல்லை. தமிழில் வெளிவந்துள்ள சிறந்த நாவல்களுள் ஒன்று.



**பழனி பிரசுரம்**

மணிக்கூண்டு :: புதுக்கோட்டை

## இந்நூலைப்பற்றி!

அகிலனின் சிறந்த சிறுகதைகளின் தொகுப்பு...... அழகிய கற்பனைகள், இனிய தமிழ்நடை.

— பொன்னி

படித்தால் இந்தமாதிரிக் கதைகளல்லவோ படிக்க வேண்டும்; வாங்கினுல் இம்மாதிரிப் புத்தகங்களல்லவோ வாங்கவேண்டும் என்று கூறும் வண்ணம்.........நல்ல தொகுப்பு ஒன்றை வெளியிட்டுள்ளார்கள் பிரசுர கர்த்தர்கள். காதல் என்ற தெய்வீக உணர்ச்சியின் அழகை ஒவ்வொரு வகையில் பற்பல நிலையில் படம் பிடித்துக் காட்டுவதில் இந்த ஆசிரியரிடம் ஒரு விசேஷத்திறமை இருக்கிறது. சொல்வதை சுருக்கமாகவும் ரசமாகவும் சொல்கிருர். இவருடைய வர்ணனைகள் பலவற்றைப் படித்துத்தான் அநுபவிக்க வேண்டும்.

— தினமணி

வார்த்தைக்கு வார்த்தை வேகம் கொடுத்து கதையை ஓடச் செய்கிறது ஆசிரியரின் இனிய நடை......சிறந்த சிறுகதைத் தொகுதிகளுள் ஒன்று.

— அமுத சுரபி



பழனி பிரசுரம்
மணிக்கூண்டு :: புதுக்கோட்டை

செந்தமிழ்ப் பதிப்பகம், புதுக்கோட்டை